
திருக்கோயில்
ஏப்ரல் 1986 விலை ரூ. 2.00
மயிலை அருள்மிகு
பொற்கொடி உடனுறை
காரணீஸ்வரர்



தமிழக ஆளுநர் மேதகு S. L. குரானா அவர்கள் 28.2.86 அன்று மயிலை அருள்மிகு கபாலீசுவரர் ஆலயத்திற்கு வருகை புரிந்தார்கள். அறநிலையத்துறை ஆணையர் திரு க. சுந்தர மூர்த்தி ஐ.ஏ.எஸ். அவர்களும், ஆலயத்தின் தக்கார் திரு மா. து. குப்புசாமி முதலியார் மற்றும் உதவி ஆணையர் திரு சி. பாலசுப்பிரமணியம் ஆகியோர் ஆளுநரை அன்போடு வரவேற்று சுவாமிதரிசனம் செய்வித்தார்கள்.

[முகப்பு]

மயிலை காரணீஸ்வரர் ஆலயத்தில் காரணீசுவரருடன் கோயில் கொண்டுள்ள அன்னை பொற்கொடியாம்பிகை

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை-600 034.

*ஆசிரியர்:* கவிஞர் டாக்டர்
**த. அமிர்தலிங்கம்,** M.A., Ph.D.

| மாலை 28 | திருவள்ளுவர் ஆண்டு 2017 அட்சய ஆண்டு சித்திரைத்திங்கள் ஏப்ரல் **1986** விலை ரூ. 2-00 | மணி : 4 |
|---|---|---|

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்

உயர்திரு
**ஆணையர் அவர்கள்**
**அறநிலைய ஆட்சித்துறை**
**சென்னை-600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**திருக்கோயில் இதழின் ஆண்டுச் சந்தா ரூ 24.00 மட்டும்**

புதிய சந்தாதாரர்கள் ஒரு ஆண்டிற்கு ரூ. 24/- எனக் கணக்கிட்டு எத்தனை ஆண்டுகளுக்குச் சந்தா கட்ட விரும்பினாலும் அத்தனை ஆண்டுகளுக்குப் பணம் அனுப்பிவைக்கலாம். அவர்கள் எப்பொழுது பணம் அனுப்பினாலும் பணம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அந்தத் திங்களிலிருந்து அவர்கள் அனுப்பிய காலம் முடிய ''திருக்கோயில்'' இதழ் அனுப்பிவைக்கப்படும் என்பது தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுது மணியார்டர் கூப்பனில் புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் **(Pin code)** எண்ணுடன் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொள்ளப் படுகின்றனர்.

## பொருளடக்கம்



### நான்காம் அட்டை

திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தின் எழில்மிகு தோற்றம்.

# வரலாற்றுக் காப்பியம் தந்த சேக்கிழார்

மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்
திருமிகு இராம. வீரப்பன் அவர்கள்

பெரியபுராணம் என்று வழங்கப்படுகின்ற - தமிழ்ப்பெருமையை, பண்பை, நிலைநாட்டிக் கொண்டிருக்கின்ற வரலாற்று நூலை-காப்பியம் என்று சிலர் ஏற்றுக்கொள்ள மறுத்தாலும் காப்பியத்திற்கான இலக்கண முறையையே மாற்றிக் காட்டி -பெரிய புராணத்தை உருவாக்கிக்காட்டியவரே அந்தக் காப்பிய ஆசிரியர் சேக்கிழார் பெருமான்.

அந்த அருந்தமிழ்க் காப்பியத்தை உருவாக்க தில்லையிலே தான் இறைவன் அடியெடுத்துக் கொடுத்ததாகச் சொல்லுகிறார்கள். இறைவன் எடுத்துக்கொடுத்த அடி, தமிழ் நாட்டுக்கு மாத்திரமல்ல; தமிழ்மொழியைப் பேசுகிறவர்களுக்கு மாத்திரம் அல்ல; எல்லார்க்கும், எந்நாட்டவருக்கும் ஏற்ப ‘உலகெலாம் ’என்றுதான் அடியெடுத்துக்கொடுத்தான்.

அந்த அடியைத்தொடங்கி நாலாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களாலே தமிழ்ப்பெருமையைத் தமிழ்ச்சான்றோர்களுடைய பெருமையைத் தமிழ்த் தொண்டர்களுடைய பெருமையை, தமிழ் அடியார்களுடைய பெருமையை, சேவை செய்பவர்களுடைய பெருமையை - அவர்கள் சமுதாயத்தினுடைய எந்த இடத்திலே பார்த்தாலும்-எந்த நிலையிலே பார்த்தாலும் அவர்களெல்லாம் இறைவன் மதிக்கின்றவர்கள், இறைவன் தேடி ஓடி வருகின்ற தொண்டர்கள் என்பதை உணர்த்த—

‘தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே’ என்று ஔவையார் பாடியதாகக்கூறிக் கொண்டிருக்கிறார்களே! அத்தொண்டர்களின் பெருமையை உலகிற்கு எடுத்துக்காட்டிய முதல் புலவர் சேக்கிழார்தான்.

மனிதனுக்கு என்ன என்ன ஆசைகள் உண்டோ அவைகளையெல்லாம் துறக்க வேண்டும் என்பதற்காக இலக்கியம் படைத்தவர்-காப்பியம் படைத்தவர் சேக்கிழார்.

மனிதனுக்குப் பொருளின் மீது ஆசை; அதன் பின் அவனது உற்றார் உறவினர் மீது ஆசை; அதற்குப்பிறகு தன்மீது ஆசை. இந்தமூன்று ஆசைகளும் கூடாது. மனிதன் பிறருக்காக வாழவேண்டும் பிறருக்காக வாழத்தான், சேவை செய்வதற்காகத்தான்-தொண்டு செய்வதற்காகத்தான் இந்த மனிதப்பிறவி.



இன்றைக்கு, தொண்டுக்காக ஒருவர் நோபல் பரிசு பெற்றால் பாராட்டிக் கொண்டிருக்கிறோம். தொண்டர்களுக்காகவே காப்பியம் படைத்த சேக்கிழாரை மறந்துவிட்டுப் பாராட்டிக் கொண்டிருக்கிறோம்.

ஏழாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை ஐநூறு ஆண்டுகள் எப்படிப்பட்ட தொண்டர்களைத் தேடிப்பிடித்திருக்கிறார் சேக்கிழார்! பெரியபுராணம் என்ற அந்தத்தொன்மையான வரலாற்று நூல் ஐநூறாண்டுக்கால வரலாற்றையல்லவா நமக்குத்தருகிறது.

புராணம் என்றால் ஒரு தொன்மையான வரலாறு என்பதை மறந்து, நாம் எங்கேயோ இருந்த கோபத்தை இந்தப் புராணம் என்ற வார்த்தையிலே காட்டி, அதையெல்லாம் தூக்கியெறிந்து, அதற்குள்ளே புதைந்து கிடந்த முத்தை, வைரத்தை, பத்தரைமாற்று தங்கத்தை, இந்த நாட்டின் பண்பாட்டை, அந்தப்பண்டுபாட்டுக்காக, உழைத்த பெருமக்களைத் தெரிந்துகொள்ள முடியாமல் செய்துவிட்டோம்.



**குன்றத்தூர் அருள்மிகு நாகேசுவரர் ஆலயத்தில் "சேக்கிழார் பிள்ளைத் தமிழ்" கல்வெட்டை மாண்புமிகு ஆர்.எம்.வீ. அவர்கள் திறந்து வைக்கிறார்.**

'தென்னாடுடைய சிவனே போற்றி' என்று சொல்லுகிறார். அடுத்த அடியிலேயே 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்கிறார். இங்கே சிவன்என்று அழைக்கப்படுகிறவனே உலகம் முழுவதும் இறைவன் என்று அழைக்கப்படுகிறான்.

இதைவிட ஒரே கடவுள் என்ற தத்துவத்தைச் சொன்ன மதம் எது? சொன்ன சான்றோர்கள் யார்?

சேக்கிழார் ஐநூறாண்டுக்கால வரலாற்றைத் தேடித்தேடி, துருவித்துருவி எடுக்கிறார்.

ஆதிதிராவிட சமுதாயத்திலே இருந்துஒருவர்; சலவைத்தொழிலாளியிலேயிருந்து ஒருவர்; மீன்பிடிப்போரிலேயிருந்து ஒருவர்; அரசனிலேயிருந்து ஒருவர்; அந்தணர் என்று அழைக்கப்படுகிற ஒருவர் - என்று இந்தச் சமுதாயத்திலேயுள்ள அனைத்துப்பெருமக்களும் வருகின்றனர். அவர்கள் தொண்டர்கள். ஆகவே இறைவன் நிலையிலே வைத்து வணங்கப்பட வேண்டியவர்கள். இந்தத் தொண்டர்களைத் தேடி இறைவன் வருகிறான். அது தான் பெரிய புராணம்! இறைவனைத்தேடித் தொண்டர்கள் போகவில்லை. 63 நாயன்மார்களைப் பற்றிய நூலைப் படித்தோமானால் -இறைவன், தொண்டு செய்கின்ற மனிதனைத் தேடி வருவான்; மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்றிருப்பதைக் காணலாம்.

சேக்கிழார் பெருமானை மக்கள் மன்றத்திலே கொண்டு வந்து நிறுத்த வேண்டும். அவர் சைவப் புலவர் என்பதனாலே மாத்திரமல்ல; சமயப்புலவர் என்பதனாலே மாத்திரமல்ல; தமிழ்ச்சமுதாயத்தை உலகிலே உயர்த்திய மாபெரும் புலமை உள்ளவர் அவர்.

மகாகவி, கவிச்சக்கரவர்த்தி என்றுகூட அவரை நீங்கள் சொல்லவேண்டாம். ஆனால், சேக்கிழார் உருவாக்கியதைப்போல உலகில் வேறெந்த மொழியிலே இலக்கியம் இருக்கிறது? தயவுசெய்து சொல்லுங்கள்!

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரம் 2ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்கிறார்கள். சீவக சிந்தாமணியைப் பத்து அல்லது பதினோராம் நூற்றாண்டில் பிறந்தது என்கிறார்கள். அப்படியானால் ஆயிரமாண்டுக் காலத்திலே ஐந்து காப்பியங்கள்தான் தோன்றியதா? இந்த ஐந்து காப்பியங்களிலேயும் சைவ சமயத்திற்குக் காப்பியமே கிடையாதா?

குண்டலகேசி, வளையாபதி ஆகிய இரண்டு காப்பியங்கள் எந்தச்சமயத்தைச் சேர்ந்தவை?

சைவத்திற்குள்ள ஒரு பெரிய சிறப்பே-இதனுடைய ஆசிரியர்களும் இந்த மண்ணிலே தோன்றினார்கள்; தத்துவங்களும் இந்த மண்ணிலே தோன்றின. அதைச் சொல்லும் மொழியும் இந்த மண்ணிலே தோன்றிய மொழி என்பதுதான்! அன்பு கூர்ந்து இதை நீங்கள் எண்ணிப்பாருங்கள்.

ஐம்பெருங்காப்பியம் என்கிறார்களே! ஏன் ஆறாவது பெருங்காப்பியமாகப் பெரிய புராணம் சேர்க்கப்படவில்லை? என்ன காரணம்? கீழ்த்தளத்திலே-அடிமட்டத்திலே இருந்த தொண்டர்களைப் பாடியதனாலா?

போப்கூட எழுதியிருக்கிறாரே, பெரியபுராணத்தைப்பற்றி; அவர் பாராட்டி எழுதியதற்குப் பிறகும் நமக்குப் புத்தி வரவில்லையே!

நீங்கள் பெரிய புராணத்திலிருந்து என்ன கற்றுத்தந்தீர்கள், என்ன சொன்னீர்கள்? அதிலே மூட நம்பிக்கை இருக்கிறது என்று சொன்ன பகுத்தறிவாளர்கள், அதற்குள்ளே என்ன இருக்கிறது என்று ஏதாவது சொல்லி, அதற்கு மாற்றைத் தந்தீர்களா! அல்லது அதற்கு மறுப்பைத்தந்தீர்களா? பெரிய புராணத்திற்குரிய சிறப்பே என்ன? பெரிய புராணம் என்று பெயர் சொல்லிவிட்டதனாலேயே அது தூக்கி எறியப்படவேண்டிய நூலாகிவிடுமா?

ஒரு தொன்மையான வரலாறு, இந்தத் தொன்மையான வரலாற்றைப் புராணம் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். அதை எழுதிய சேக்கிழாரும் பெரிய புராணம் என்று பெயரிட்டாரில்லை. அவர் திருத்தொண்டர்புராணம் என்றுதான் பெயரைத்தந்தார். எந்தப் புண்ணியவானோ பின்னாலே வந்து அதைப்பாராட்டவேண்டும்என்று எப்படி 'மகாகவி' என்று சுப்பிரமணிய பாரதியைச் சொல்லுகிறோமோ அதைப் போல, இது ஒரு பெரிய புராணம். மற்றவைகள் எல்லாம் சாதாரண புராணங்கள். ஏனென்றால் அன்றைக்கு சமயப் போராட்டம் இருந்தகாலம். ஆகவே கந்தபுராணம் மற்ற புராணங்கள், சிவபுராணம் இதெல்லாம் இருக்கிறபொழுது இதற்குப் பெரியபுராணம் என்று பெயரிட்டிருக்கின்றார். இந்த பெரிய புராணத்திற்குள்ளே என்ன இருக்கும் என்று கருதுகிறீர்கள். நான்படித்த இளைஞர்களைக் கேட்கிறேன். அதில் ஆண்டவனைப் பற்றியா பேசியிருக்கிறது!

சிவனைப்பற்றியா பேசியிருக்கிறது? வேறு எந்த நாட்டைப்பற்றியுமா சொல்லியிருக்கிறது? இராமாயணம் எங்கேயிருந்து எடுத்த கதை, கம்பர் எடுத்த மூலம் எங்கே? வால்மீகியின் இடத்திலே இருந்து எடுத்தான். வடக்கே நடந்த வரலாற்றை, அல்லது சம்பவங்களைக் கதையை எடுத்துக்கொண்டான். பாரதம் எங்கேயிருந்து வருகிறது? நம்முடைய புரட்சிக்கவிஞர், பாடினாரே புரட்சிக்கவி என்கிற தலைப்பிலே 'பில்கணியம்' எந்த மொழியிலே எழுதப் பெற்றது? எங்கே நடந்ததாக உள்ளது? எந்த இலக்கியத்தைச் சார்ந்தது? ஆனால் பெரிய புராணம்-அது ஒன்றுதான் தமிழ் மண்ணிலே நடந்த வரலாற்றைத் தெரிவிப்பது. மற்ற காப்பியங்கள் எல்லாம் வடக்கே இருந்து எடுக்கப்பட்ட-இரவல் வாங்கிய சரக்குகள். பெரிய புராணம் ஒன்றுதான் இங்கே இருந்து வடக்கே போன காப்பியம். கருப்பொருள் நம்முடையது. இந்த மண்ணைப்பற்றியது. இந்த மண்ணிலே வாழ்ந்த-மிகச்சிறந்த மாமணிகளாக தொண்டுள்ளத்தோடு வாழ்ந்த 63 பேரை குறிப்பிடுகின்ற வரலாற்று நூல்; வரலாற்றுக் காப்பியம் பெரிய புராணம். இதற்கு ஈடு இணையுள்ள ஒரு காப்பியத்தைச் சொல்லுங்கள்.

தொண்டர்களுடைய பெருமையைச் சொல்லுகிற வரலாற்றுக் காப்பியம் தானே பெரியபுராணம். அதை எங்கே போட்டு வைத்திருக்கிறோம்? அதைப் பாடியவரும் யார் என்று கருதுகிறீர்கள்? சோழநாட்டினுடைய முதலமைச்சர். நம்முடைய சென்னைக்கருகிலே குன்றத்தூரிலே பிறந்தவர். வேளாண் குடியிலே பிறந்த பெருமான் சான்றோனாக விளங்கினார். அவரை நம்முடைய சோழன் முதலமைச்சராக ஏற்றுக்கொண்டார். அதற்குப் பிறகு அந்த முதலமைச்சர் பதவியை துறந்துவிட்டல்லவா இலக்கியம் படைக்க வருகிறார்.

சேரன் தம்பி சிலம்பைப் படைத்தான். ஆனால் இங்கே முதலமைச்சராக புகழோடு இருந்தவர், பெருமையோடு இருந்தவர், அவரல்லவா இந்த மண்ணினுடைய வரலாற்றை எழுத வேண்டும், படைக்கவேண்டும் என்று சோழன் கேட்கிறான். சோழன் கேட்டதற்காகவே 500 ஆண்டு கால வரலாற்றை தொகுக்கிறார். இந்த 63 நாயன்மார்கள் என்று அழைக்கப்பட்ட தொண்டர்கள் வாழ்ந்த இடங்களுக்குப் பயணம் செய்கிறார். எங்கே வாழ்ந்தார்கள் என்று பார்க்கிறார்.



**குன்றத்தூர் ஆலயத்தில் சேக்கிழார் பெருமானை மாண்புமிகு அமைச்சர் எழுந்தருள வைக்கிறார்.**

சேக்கிழார் தமிழ்நாட்டைப் பற்றிப் பாடியிருக்கிறார். தமிழ்நாட்டிலே வாழ்ந்தவர்களைப்பற்றி பாடியிருக்கிறார். தமிழகத்தின் வரலாற்றைச் சொல்லியிருக்கிறார். இன்றைக்கு பெரியபுராணத்தை விட்டு விட்டால் தமிழனுக்கு வேறு வரலாறே இல்லை. அதை நாம் நினைவிலே வைத்துச் சேக்கிழார் பெருமானைப் போற்றியாக வேண்டும்.

---

# வாசகர் எண்ணங்கள்



மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் திருமிகு ஆர். எம். வீ. அவர்களின் "தமிழ் மொழியும் சமயமும்" அரிய சிந்தனைகளைக் கொண்டு விளங்கிய அற்புதக் கட்டுரையாகும். தமிழ் உணர்வுக்கு வித்திட்ட முதல்வர்-மூலவர் திருஞானசம்பந்தரே என்பதைத் தெள்ளத் தெளிவாக்கிய அமைச்சர் தம் கட்டுரையைத் தமிழ்த் தாயின் மகுடத்தில் பதிக்கப்பட்ட விலை மதிப்பில்லா மாணிக்கம் என்று பாராட்டுவதே பொருத்தமாகும்.

—அ. செவ்வேள், சென்னை-600005.

அண்மையில் மறைந்த தத்துவச் சிந்தனையாளர் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் கீர்த்தியைப் பாராட்டிய பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் கட்டுரையும் கீர்த்தி வாய்ந்ததே.

—விஜயவேல், கோவை.

ஆறு திங்கள்களாக நெஞ்சைக் கொள்ளை கொண்டிருந்த "கிருட்டிணன் தூது" நிறைவு பெறப் போகிறதே என்று வருத்தமாக இருந்தது. "பாரதப் போரில் பார்த்தசாரதி" என்ற புதிய கட்டுரைத் தொடர் ஆரம்பமாகப் போவது அறிவிக்கப்பட்டதும், வருத்தம் மகிழ்ச்சியாக மாறி விட்டது.

—ஆ. சாஸ்திரி மோகன், கருங்கல்பட்டி, சேலம்-6.



# கும்பகர்ணனின் மாட்சி

—பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம்—

இராவணனோடு உடன் தோன்றியவன் கும்பகருணன்: உடன் பிறந்தே கொல்லும் வியாதி போன்றவன் அல்லன். செஞ்சோற்றுக் கடன் கழிப்பதற்காகத் தகாது என்று தன் மனம் கூறிய செயலைக் கூடச் செய்தான். அவன் கோழையல்லன்; இராவணனோடு ஒத்த வன்மை யுடையவன். ஆகாயத்தை யழிக்கும் மேன்மையும், கடலே யனைய கண்களும் உடையனாம் அவன். அவன் தம்பி வீடணனே அவனைக் குறித்துக் கூறுகையில் ''மண்ணினை அளந்து நின்ற மாலென வளர்ந்து நின்றான்'' என்று கூறுவானேயாகில் அவன் பெருமை நம்மால் அளவிடற்கரியதாமன்றோ!

இவ்வரிய வீரன் முதன் முதலில் மந்திரப் படலத்தில் காட்சியளிக்கிறான். கேவலம், குரங்கு ஒன்று ஊரைச் சுட்டுச் சூறையாடி விட்டதென்று உளமருகி நிற்கின்றான் இராவணன்; சிறந்த வீரனுக்குத் தகாததாகிய 'தன்னிரக்கம்' (*Self Pity*) கொள்ளுகிறான்; தன்னாட்சி சிதைந்து போனதாக நினைந்து வருந்துகிறான். இந்நிலையில் கும்பகருணன் தமையனைக் காண்கிறான்; 'மூவரும் அஞ்சத்தக்க போரினைச் செய்கின்றவனும், வெள்ளியங்கிரியினை விடையின் பாகனோடு அள்ளி விண்தொட எடுத்த ஆற்றலோனும் ஆகிய நீயா இங்ஙனம் வருந்துகிறாய்'' என்று கேட்கிறான். இராவணனை நோக்கி அவன் கூறும் வார்த்தைகளாலேயே தமையன் மாட்டுக் கும்பகர்ணன் கொண்டுள்ள மதிப்பும், அன்பும் வெளிப்படுகின்றன. அவன் கூறும் முதற் கருத்தைக் காண்க:

''நீஅயன் முதற்குலம் இதற்(கு) ஒருவன் நின்றாய்
ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்(து) அறி(வு) அமைந்தாய்
தீயினை நயப்புறுதல் செய்தவினை செய்தாய்
ஏயின உறத்தகைய இத்துணைய வேயோ''

(மந்திரப் படலம்-48)

இவ்வொரு பாடலிலேயே கும்பகருணனையும் இராவணனையும் முழு வடிவத்தோடு காண முடிகிறது. இராவணனை எத்தகையவன் என்று கும்பகர்ணன் கருதுகிறான்? அறிவுடைய ஒருவன் பழிச்செயல் செய்ய முற்படுகையில் அதனால் விளையும் பயனை யன்றோ முன்னர்க் கருதுவான். பெரியோர்களைப் பற்றிச் சொல்லும் பொழுது ''பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்'' என்றன்றோ புறநானூறு கூறுகிறது. மேலும், தம்மால் விரும்பப்படுகிற பொருளிடத்து உயிரனைய காதல் உடையவ ராயினும் அப்பொருளைப் பெறுவதால் பழியேற்படுமெனில் சான்றோர் அப்பழிக்கஞ்சிப் பொருளை விடுவரே தவிரப் பழியொடு வரும் அப்பொருளை விரும்பமாட்டார். இக்கருத்தையே அகநானூற்றில் ஒரு பாடலில் காண்கிறோம். ''கழியக்காதல ராயினும் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்.'' எனவே, கும்பகருணன் தன் அண்ணன் பெற்ற பழியை நினைந்தே வருந்துகிறான். அப்பழியும் அவனளவில் நிற்பதல்லவே! புலத்தியன் மரபிற் தோன்றியமையின் அக் குடி முழுதிற்குமன்றோ பெரும் பழி சூழ்ந்து விட்டான்! சாதாரணக் குடியிற்பிறந்தவனே இத்தகைய தவற்றைச் செய்யின் உலகம் பழிக்கும். நான்முகன் முதலாக வருகின்ற உயர் குடியிற் பிறந்த ஒருவன் செய்யின் அக் குற்றம் மிகப்பெரிதாக •வன்றோ மதிக்கப் பெறும்!

''குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து''

(குறள் 657)

எனவே, இராவணன் செய்த இக்குற்றம் மிகப் பெரியது என்பதைக் கும்பகர்ணன் நன்கு எடுத்துக்காட்டுகின்றான். அம்மட்டோ! சாமவேதம் பாடும் இராவணனது கல்வி எத்தகையது? மிகப் பரந்தும் ஆழ்ந்தும் உள்ளது. ஆயிரம் மறைப் பொருளைக் கண்டது. கேவலம், மறையை அப்படியே உருத்தள்ளி ஒப்பிப்பவன் அல்லன் இராவணன். மறையின் பொருளையும் நன்கறிந்தவன் ஆவன்; ஏனையோர் போல மிகுதியும் கற்று, கற்றதை வெறும் ஏட்டுக் கல்வியாகக் கொண்டிருப்பவன் அல்லனே! எனவே மறைப்பொருள் 'அறிந்து' என்று கவிஞன் கூறாமல் வேண்டுமென்றே பிறிதொரு சொல்லைப் பயன்படுத்துகிறான். அறிதல், தெரிதல், விளங்கிக் கொள்ளுதல், உணர்தல் என்ற சொற்களை நாம் இன்று ஒரே கருத்தில் பயன்படுத்தினும் அவை வெவ்வேறானபொருட் சிறப்புடையவை. ''அறிதல்'' அறிவு மாத்திரையாய் நின்று அடங்குவது. அறிவால் அறிந்த ஒன்றை வாழ்க்கையில், நடைமுறையில், கொணர வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. ஆனால் 'உணர்தல்' அத்தகையதன்று. அறிவால் அறிந்து மனத்தால் விரும்பப்படும் ஒன்று, சிந்தையில் சென்று தங்கும் பொழுதே உணர்தல் தன்மையில் அடங்குகிறது. எனவே ஒரு பொருளை அறிதலுக்கும் உணர்தலுக்கும் கடலத்தினை வேற்றுமை உண்டு. கவிஞனே இவ்வேற்றுமை நயந் தெரிந்து சொற்களைப் பயன்படுத்தவேண்டும். இதனை நன்குணர்ந்த கம்பநாடன் இராவணன் கற்றது வெறும் ஏட்டுக்கல்வி யன்று என்று கூறுகிறான். அவன் கல்வி வாழ்க்கையோடு ஒன்றியது என்று சொல்லுகிறான். மறை, பொருளோடு அறியப்பட்டு அது வாழ்க்கையில் இரண்டறக்கலக்கும் பொழுது உணர்தல் தன்மையைக் கிட்டுகிறது. இதனாலேயே 'ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்து அறிவு அமைந்தாய்' என்று கும்பகர்ணன் சொல்கிறான். கல்வியின் பயன் இதுவே யாகுமாதலின் இஃதில்வழிக் கல்வி பயனற்றதாய் முடியும். இங்ஙனம் வாழ்க்கையில் ஒன்றாது நிற்கும் கல்வி மனிதனுக்கு நன்மை செய்வதின் றெனினும் தீமை செய்தே தீரும். வீணான தருக்குக் கொள்ளவும் ஆராயாது வினை செய்யவும், தொட்டதிலெல்லாம் ஐயங் கொள்ளவும் செய்யுமாகலின் அக்கல்வி வேண்டாமென்று கூறவந்த தாயுமான அடிகள் ''கற்றார்களினும் கல்லாத பேர்களே மிக நல்லவர்கள்'' என்று கூறிப் போந்தார். அங்ஙனம் கூறுவதின் கருத்தையும் பின்னடியிற் கூறிவிடுகிறார். 'கற்றும் அறிவில்லாத கன்மத்தை என் சொல்லுவேன்'. எனவே, கல்வியின் முடிந்த பயன் வாழ்க்கைக்குப் பயன் படுவதாயும் வாழ்க்கையில் ஒன்று கூடுவதாயும் இருக்க வேண்டும் என்பதும் ஒரு கலை, இக்கருத்தை உள்ளடக்கியே 'உணர்ந்து அறிவு அமைந்தான்' என்று கூறப்படுகிறது. அறிவு அமைதலுக்கு உணர்தல் இன்றியமையாததாக லின் அது முன்னர்க் கூறப்பட்டது. இச்சொல்லுக்கு இதுவே பொருள் என்பது பின்வரும் சான்றால் வலியுறுத்தப்படும்.

பாண்டவர் சூதாட்டத்தைப் பாட வருகிறார் நம்காலக் கவிஞராகிய பாரதியார். எல்லாவற்றையும் வைத்துத் தருமன் இழந்துவிட்டான். இறுதியாக நாட்டையும் வைத்திழந்துவிட்டான். இதனைப் பாடுகிற கவிஞனுக்கு, இச்செயல் தீராத வருத்தத்தை உண்டாக்குகிறது. உடனே இக்காரியத்தைச் செய்த தருமனைக் கவிஞன், தன் கற்பனைக் கண்ணில் பார்க்கிறான். ''ஆகா தருமனா இக்காரியஞ் செய்தான்? தான் வைத்துக் காக்கவேண்டிய அடைக்கலப் பொருளாகிய நாட்டை - மக்கள் வாழுகிற நாட்டை, ஆடு மாடுகளையும் உயிரில்லாப் பொருள்களையும் பணையம் வைத்து ஆடுவது போல ஆடிவிட்டான்! என் செய்வது'' இவ்விதம் நினைந்தவுடன் கற்பனை யூற்றுத் திறக்கிறது. கவிஞன் பாடுகிறான்;

> ''கோயிற்பூசை செய்வோர்—சிலையைக்
> கொண்டு விற்றல் போலும்
> வாயில் காத்து நிற்போன்—வீட்டை
> வைத்(து) இழத்தல் போலும்
> ஆயிரங்களான நீதி
> அவை உணர்ந்த தருமன்
> தேயம் வைத்திழந் தான்—சிச்சி
> சிறியர் செய்கை செய்தான்.''

இவ்விடத்தில் 'உணர்ந்த' என்ற இச்சொல்லின் பொருள் நன்கு விளங்குதல் காண்க, நீதி, அறிதல் மாத்திரையாய் நிற்பதற்கு ஏற்பட்டதன்று; உணர்தற்கும், உணர்ந்து நடப்பதற்கும் அன்றோ ஏற்பட்டது? இதனை நன்கு உணர்ந்த கவிஞன், நீதி உணர்ந்த தருமனா இங்ஙனம் செய்தான் என்று வருந்துகிறான். நிற்க.

இராவணனுடைய கல்வி எத்தகையது என ஒரே அடியில் கும்பகருணன் கூறி விடுகிறான்; ''ஆயிரமாயிரமான மறைகளையும், மறைகளின் பொருள்களையும் நன்கு உணர்ந்தான்; உணர்ந்த அளவோடு நில்லாமல் வாழ்க்கையில் அவற்றைப் பயன்படுத்தி அறிவு அமைதியான நிலையை அடைந்தான், தெளிவை அடைந்தான்.''

அங்ஙனம் இல்லாக்கால் வள்ளுவப்பெருமான்,

> ''ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும்
> தானடங்காப்
> பேதையில் பேதையா ரில்''
>
> (குறள் 834.)

என்று கூறியாங்குப்பேதையாக வன்றோ அவன் ஆகிவிடுவான்? இவ்வொரு அடியாலேயே

## மனைவியின் கையை வெட்டிய கலிகம்ப நாயனார்

பெண்ணாகடம் என்ற ஊரில், வணிகர் குலத்தில் தோன்றியவராகிய கலிகம்ப நாயனார், நாள்தோறும் சிவனடியார்களுக்கு அமுதுசெய்வித்தலையே பெருந்தொண்டாக ஆற்றிய அருஞ்சிறப்பு மிக்கவர். சிவனடியார்களுக்கு இவர் பாதபூஜை செய்து, மேன்மை விளங்கும் போனகமும் விரும்பு கறி நெய் தயிர் தீம்பால் தேனினும் இனிய கனி கட்டி களைப் படைத்துத் தினமும் அடியார்களுக்கு அமுதுசெய்விப்பார்.

அவ்வாறு அமுதுசெய்வித்துவரும் நாளில் ஒரு நாள் ,தம் மனைவியார் நீர்வார்க்க, சிவனடியார்களுக்குப் பாதபூஜை செய்து கொண்டிருந்தார் கலிகம்பர். முன்னாளில் இவர்தம் வீட்டில் பணியாளாக இருந்த ஒருவரும், சிவனடியாராக உண வருந்த வந்திருந்தார். கலிகம்பர், அவரைப் பணியாளாக மனதில் சிறிதும் எண்ணாமல், சிவனடியாராகவே எண்ணிப் பாதபூஜை செய்ய முற்பட்டார். ஆனால் அவர்தம் மனைவியாரோ, ''இவர் நம் பணியாளாய் இருந்தவர் ஆயிற்றே'' என்று எண்ணியவராய், நீர்வார்ப்பதில் சற்றே தயக்கம் காட்டினார்.

தம் மனைவியின் தயக்கத்தையும், எண்ண ஓட்டத்தையும் அறிந்துகொண்டவராகிய கலிகம்பர் உடனே தாம்வைத்திருந்த வாளால், நீர் வார்க்க தயங்கிய மனைவியின் கையினை வெட்டி அவர்தம் தவறுக்குத் தண்டனை அளித்திருக்கிறார்.

''பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க்காட்பட்டு தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் தாள்கழுவ
வையத் தவர் முன்பு வெள்கிநீர் வாராவிட, மனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிகம்பனே''

என்பது திருத்தொண்டர் திருவந்தாதி.

---

இராவணன் சிறப்பும், அச்சிறப்பை நன்கு உணர்ந்த அவன் அருமைத் தம்பியின் சிறப்பும் நன்கறியக் கிடக்கின்றன. இவ்வளவு அறிவு படைத்தவனாகலின் கும்பகர்ணன் அவனை நோக்கி மேற்கூறியவாறு கூறுகிறான். 'உனக்கு ஏற்படும் பழியை நீ சட்டை செய்யவில்லையாயினும் குலத்திற்கு வரும் பழியைக் கூடவா மறந்து விட்டாய்?' என்ற முறையில் இவன் பேச்சு அமைந்திருத்தல் அறிக. மேலும் கூறுகிற ஒன்பது பாடல்களுள் ஏறத்தாழப் பாடல்தோறும் குலப்பெருமையும், புகழும் பேசப்படுகின்றன. இங்ஙனம் எடுத்துக் கூறுவதாலேயே இராவணன் இவை இரண்டையும் பெரிதும் மதிக்கின்றவன் என்பது பெறப்படுகின்றதன்றோ! ''பாவியர் உறும்பழி இதிற் பிரிதும் உண்டோ'' ''பொன்னடி தொழத் தொழ மறுத்தல் புகழ் போலாம்'' இங்ஙனம் கூறுவதோடு அமையாமல், ''என்று, பிறன் மனைவியை விரும்பிச் சிறை வைத்தாயோ அன்றே அரக்கர், புகழும் மாய்ந்தது' என்றும் கூறுகிறான். சற்று நின்று ஆராய வேண்டிய இடம்:

''என்(று) ஒருவன் இல்லுறை தவத்தியை இரங்காய்
வன்றொழிலி னாய்மறை துறந்துசிறை வைத்தாய்
அன்றொழிவ தாயின அரக்கர்புகழ் ஐய
புன்றொழிலி னார்இசை பொறுத்தல்புல மைத்தோ''

(மந்திரப் படலம். 51)

நேர், நின்று போர் செய்து பகைவனை வென்று அவன் மனைவி மக்களைச் சிறைப்பிடித்து வைத்தல் உண்டு. ஆனால், ஒருவன் மனைவியைத் தவறான எண்ணத்துடன் கொணர்ந்து சிறை வைத்தல் அறிவுடையவன் செய்கின்ற செயலன்று. எனவே, தவறு நடந்தவிடம் சிறை வைத்தலிலில்லை. சிறை வைக்கப்பட்ட பொருள்டத்துக்கொண்ட தவறான விருப்பமே, என்பதை நன்கு அறிவுறுத்துவான் வேண்டி முதற்பாட்டில் '' வேறொரு குலத்தோன் தேவியை நயந்து சிறை வைத்தாய்'' என்றுங் கூறுகிறான். இந்நயப்பே அழிவுக்கு காரணம் என்றுங் கூறுகிறான். விருப்பம் ஏற்பட்ட அப்பொழுதே அரக்கர் புகழ் அழிவதாயிற்று என்றுங் கூறுகிறான். ஏன் எனில்,

''எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி''

(குறள் 145)

என்று வள்ளுவர் கூறிப்போந்தா ரன்றோ!

அண்ணன் புகழ்மேற் கொண்ட காதலை, நன்கு அறிந்த கும்பகர்ணன், மீண்டும்மீண்டும் அதனையே சுட்டிக்காட்டுகிறான். தருக்க முறைப்படியும் தவறு செய்தவன் புகழை அடைதல் இயலாத காரியம் என்பதை எடுத்து காட்டுகிறான்.

அண்ணன் செய்த செயல் குலத்திற்கே இழிதகைமை தேடிற்றென்ற வருத்தம் கும்பகருணனுக்கு எல்லையற்று இருந்தது. மீண்டும் மீண்டும் அதனையே குறிக்கின்றான். 'சிட்டர் செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்.''

## எண்ணாத நாளில்லை....

பாட இனித்திடும் பழநிமுருகனின் திருநாமம்
பார்க்கப் பலன்தரும் பங்குனிஉத்திரப் பெருநாளும்
தீர்த்த காவடிகள் தாங்கிடும் தோள்களும் பல கோடி
தீராத வினைகளும் தீர்ந்திடும் அவனால்பறந்தோடி

(பாட)

மாங்கனி ஒன்று மறுத்ததுகொண்டு குகன்வந்தான் மலைமுகம் நின்றான்
வேண்டிடும் அடியார் வேண்டுதல் யாவும்அவன் தந்தான் - நம்பகைவென்றான்
ஆண்டி வடிவாகி அரசன் அருளோடு உலகாளும் வேலா-உமைபாலா

(பாட)

சரவணம் சண்முகம் பலமலர் நறுமணம் தாங்கிவர
அறுமுகம் திருமுகம் பணிந்திடும் வேட்கையில் ஆடிவர
கிரிசுற்றப் போகும் பாவம்
குலம் ஓங்க வாழ்வில் லாபம்

(பாட)

பிரமன் சாரதி தங்கத் தேரிலே ஊர்கோலம்
பரமன் பார்வதி வந்து வாழ்த்தவே வைபோகம்
காணச் செய்தன கண்கள் புண்ணியம்
வணங்கக் கொண்டன கைகள் பாக்கியம்
அரகர அரகர அரோகரா எனச் சொல்லாத நாவில்லை
சரவண பவன்திருப் பாதமும் நெஞ்சினில் எண்ணாத நாளில்லை

(பாட)

—டாக்டர் த. அமிர்தலிங்கம்

இங்ஙனம் பழியை எடுத்துக் கூறினான். பிறகு குலத்திற்கே தீங்கும் பழியும் விளையும் என்று எடுத்தும் காட்டினான். ஒரு வேளை இராவணன் நிலைமை. மாறிப் புகழையும் சட்டை செய்யாது இருந்து விடலாமல்லவா? மேலும், குடிக்கு வருகின்ற பழியைக்கூடச் சட்டை செய்யாதிருந்து விடலாம். காரணம், மனித மனம் பன்னெடுங் காலம் ஒன்றைப் பற்றி நிற்பதில்லை. எல்லையற்ற புகழைப் பெற்று விட்டமையின் இனிப் புகழுக்கு இடமில்லை யாதலின் பழிவரினும் வருக என்று நினைத்து விடலாமல்லவா? எனவே, இறுதியாக வேறு ஒரு கருத்தைக் கொண்டு வருகிறான். இதுவும் இராவணனை நன்குதெரிந்து கொண்டமையின் அவன் செய்கிற இறுதி உபாயமாகும். எள்ளி நகையாடும் முகமாக, ஒவ்வாத இரு பொருள்களைச் சேர்த்துச்சொல்கிறான். இராவணன், மானத்தோடு வாழ வேண்டுமென்று பெரிதும் விழைகிறவன் என்று அறிகிறோம். மானம், இழந்து உயிர் வாழ்வதை எந்த வீரனும் விரும்பான். ஏன்? சாதாரண மனிதனும் அதனை மதியான். ஆகவே மானம் இழந்து நீ வாழ விரும்புகிறாயா என்ற முறையிற் கேட்கிறான். மானம் இப்பொழுது இழக்க என்ன நேர்ந்து விட்டது என்ற கேள்வியைத் தமையன் கேளாமலே இவன் விடை தந்து விடுகிறான். ''பேசுவது மானம், இடை பேணுவது காமம்'' என்று அவன் கூறுமுகத்தான் இவை இரண்டும் ஒன்றோடொன்று விரோதமானவை என்றும் ஒன்றுள்ள விடத்தில் மற்றொன்று இராதென்றும் அறிவிக்கிறான். இன்றும் பழமொழி யளவில் இது வழங்கக் காண்கிறோம். ''ஆசை வெட்கம் அறியாது'' என்ற பழமொழிப் பொருளே மேற் பாடலின் பொருளாகும்.

இந்நிலையிலும் இராவணன் தன் மனம் மாறியதாகத் தெரியவில்லை. உடனே தனது போக்கை மாற்றிக்கொண்ட கும்பகருணன் போர் செய்தலே தக்கது என்று முடிபுகூறி விட்டான். ''மட்டவிழ் மலர்க்குழலினாளை யினி மன்னா விட்டிடுது மேல்எளிய மாதும் அவர் வெல்லப்பட்டிடுது மேல்அதுவும் நன்று பழியன்றால்'' எனவே தமையன் மனம் மாறாதது கண்ட தம்பி கூடுமானவரை பழி வராமல் தடுக்க முயல்கிறான். இராவணனும் இக்கருத்தை ஏற்றுக் கொள்கிறான். கும்பகருணனது முடிபை ஏற்றுக் கொள்வதால்அவன் முற்கூறிய நியாயங்களனைத்தையும் இராவணன் ஏற்றுக்கொண்டான் என்ற கருத்தன்று. பழியளவிற்கு இராவணன் அஞ்சினான் என்ற கருத்தை யாரும் மறுப்பதற்கில்லை. சீதையின் மாட்டு எவ்வளவு காமங்கொண்டிருந்தானோ, அவ்வளவு புகழ்மாட்டுங் காதல் கொண்டிருந்தான் அவன். இறுதியாகத் தனது எண்ணம் நிறைவேறாது என்று கண்ட பின்னருங்கூட அவன் போர் செய்து மாய்தலே தக்கதும் புகழும் ஆகும் என்று நினைக்கிறான். எனவே அவனது சீரிய பண்பில் ஐயப்படுவதற்கொன்றும் இல்லை.

இனி இறுதியாகப் போர் மூண்டு விடுகிறது. கும்பகருணனை எழுப்பிக்கொண்டு போர்க் கோலம் பூணுகிறார்கள். மீண்டும் கும்பகர்ணன் தன் அண்ணனிடம் முறையிடுகிறான். ஆனால் இப்பொழுது பேசுகிற கும்பகர்ணன் மந்திரப்படலத்தில் கண்ட கும்பகருணன் அல்லன். எதிர்பாராத முறையில் போர் மூண்டு விட்டது. இப்பொழுது அதைத் தடுக்க அவன் முயல்கிறான்; தடுத்தாவது பழிவாரமற் காக்கவே முயல்கிறான்.

''சானகி துயர் இனம் தவிர்ந்த தில்லையோ
வானமும் வையமும் வளர்ந்த வான் புகழ் போனதோ'

என்றே வருந்துகிறான்; மீண்டும் தமையனை நோக்குகிறான்; தமையன் செய்த ஒன்றுக்கு மேற்பட்ட தவறுகள் நினைவுக்கு வருகின்றன.

## யாவரே பெரியர் யாவரே சிறியர்

**—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை**

**(மலையை நோக்கி**
**அணில் கூறுவதைப்போல் பாடியது)**

'அற்பத் திருடா' என்றெனை அழைத்த
வெற்பே யானும் விளம்பக் கேளாய்.
அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரு வண்மையும்
உனக்கென்ற
உரைமொழி முற்றும் உண்மையே ஆயின்
ஒருவகைப் பொருளின் ஒருல காமோ?
ஒருவெயில் மழையின் ஓராண்டு தேறுமோ?
பற்பல பொருளும் பற்பல பருவமும்
ஒன்றாய்க் கூடினே உலகாம் ஆண்டாம்
ஆதலின் யானிவ் வகிலம் உதித்தே
இருப்பதை இழுக்கா எண்ணவும் மாட்டேன்
என்தொழில் இயற்றவும் யாவர் வேறுளார்?
உன்பெரும் உருவெனக் கில்லை. உனக்கும்
என்சிறு வடிவிலை. மேலும் என்றன்
உள்ளக் களிப்பில் உற்று நோக்கிடில்
எள்ளத் தனையும் உனக்கிலை இலையே
அணிற்பிளை சாடி ஓடி அலைந்து
விளையா டற்கு விரிவிடம் பெறுவாய்
ஐயம் இதற்கிலை. அடலும் ஆற்றலும்
ஒவ்வொரு வர்க்கும் ஒவ்வொரு விதமாம்
அறத்தொடும் முறையொடும் ஆழ்ந்த
அறிவொடும்
அனைத்துமிவ் வுலகில் அமைக்க லாயின
வனங்களை முதுகில் வகித்து நின்றிட
வல்லைநீ யாயின் மற்றிங் கெனைப்போல்
நெல்லைக் கொறிக்க நின்னால் ஆகுமோ?
யாவரே பெரியர் யாவரே சிறியர்!
ஒன்றிற் பெரியர் ஒன்றிற் சிறியராம்
ஒன்றிற் சிறியர் ஒன்றிற் பெரியராம்
ஆதலின் அற்பர் ஆகா தவரென
ஓதுதல் மடமையின் சாதனை யாமே.



பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி
ஆலயத்தில் தங்கத்தேர்ப் புறப்பாடு.



தற்பொழுது இராவணன் செய்த பெருந்தவறு உலகந்தோன்றிய நாளிலிருந்து பெரு வீரர்கள் செய்த தவறுதான். அத்தகைய தவற்றினால் எத்தனையோ சாம்ராச்சியங்கள் அழிந்தொழிந்தன. அப்பெருந்தவற்றை இராவணனும் செய்துவிட்டான்; ஆய்ந்தோய்ந்துபாராது செய்துவிட்டான். இப்பொழுது கூடக் கூடுமாயின் அதிலிருந்து விடுதலை பெறலாம்; ஆனால் வெளி வராவிடின் குல முழுதும்ஒருங்கழிந்து விடுமே என்று அஞ்சுகிறான். அப்பெருந்தவறு தான் யாது? பகைவன் வலி எத்தகையது என்றறியாது போரை வலுவில் வரவழைத்துக் கொண்டமையே. போர் முறை தெரிந்த வீரனா இராவணன்? வலியறிதல் என்ற துறையையே அவன் கற்க வில்லையா?

'வினைவலியுந் தன்வலியும் மாற்றான்
வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்''
(குறள். 471)

என்ற கருத்தை அறவே மறந்துவிட்டான். வாலியின்பால் தோற்றமையும், கார்த்தவீரியன் பால் தோற்றமையும் மறந்துவிட்டானா? அத்தகைய வாலியைக் கொன்ற அம்பு இராமன்

மாட்டு இன்னும் இருக்கின்றதே! காற்றின் உதவியால் கடலைக் கடந்த குரங்கு இன்னும் அவன்பால் உள்ளதே! மாற்றான் வலியை இராவணன் ஆணவத்தால் நன்கு தெரிந்து கொள்ளவில்லை. கும்பகருணன் அதனை எடுத்துக் கூறுகிறான்.

'காலினிற் கருங்கடல் கடந்த காற்றது
போலவன் குரங்குள சீதை போகிலள்
வாலியை உரங்கிழித் தேக வல்லன
கோலுள யாமுளேம் குறையுண் டாகுமே?'

(கும்பகர்ணன் வதைப்படலம் 87)

பகைவன் பலத்தை நன்கு அறியாத பெருங் குற்றம் இழைத்துவிட்டான் இராவணன். இம் மட்டோ? துணை வலியும் ஆராய வேண்டாமா? 'கொடுத்தனை இந்திரற்குக் குலமும் கொற்ற மும்' என்றமையான் இனி அவர்கள் துணை இல்லை என்பதை எடுத்துக் காட்டினான்.

அஃது ஒருபுறமிருக்க, தன் வலியையாவது ஆராய்ந்தானா இராவணன்? வெற்றிமேல் வெற்றி பெற்றார் செய்யுந் தவற்றையே யன்றோ இவனும் செய்து விட்டான்! இது வரைத் தோல்வியென்பதையே காணாமையின் தன் வாழ்நாளில் தோல்வி என்பதே இல்லை என்றன்றோ ஒரு தவறான முடிபுக்கு வந்து விட்டான்!

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்(து)ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்

(குறள். 476)

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர்

(குறள். 473)

போர் வீரனுக்கு வேண்டப்படுவதாகிய இவ் விரு பண்புகளையும் மறந்துவிட்டான். தக்க சமயத்தில் அவனுக்கு இதனை எடுத்துக்காட்ட வேண்டாமா? இதுவே கும்பகருணன் இப் பொழுது செய்கிற செயல்!

''அண்ணா! உன் வலிமைக்கும் எல்லை யுண்டு. அதன் மேற்செல்வாயேயாயின் உயிர்க் கிறுதி ஆகிவிடும்'' என்று சொல்வானாய்,

''கல்லலாம் உலகினை வரம்பு கட்டவும்
சொல்லலாம் பெருவலி இராமன் தோள்களை
வெல்லலாம் எனபதும் சீதை மேனியைப்
புல்லலாம் என்பதும் போலுமால் ஐய''

(கும்பகர்ணன் வதைப்படலம்81)

என்றும்

''கெடுத்தனைநின் பெருங் கிளையும் நுன்னையும்'' என்றும் எடுத்துக் கூறினான். இவற்றினால் எல்லாம் இராவணன் அறிவு பெறவில்லை. தன்பாலுள்ள நம்பிக்கை யால் கும்பகர்ணனை இழித்துப் பேசி மனம் வருந்துமாறு கூறினான்; இறுதியாகக் கும்ப கருணன் மீண்டும் கூறலுற்றான்; இராவணன் கொண்ட செருக்கிற்கும் அவன் இப்பொழுது செய்யும் தவற்றிற்கும் காரணம் அவன் தனது பலத்தின் பேரிலும், இந்திரன் பகைவனாம் இந்திரசித்தன் வன்மையின்மாட்டும் கொண் டுள்ள நம்பிக்கை தானே! அதனையும் தகர்க் கிறான் கும்பகர்ணன். இந்திரசித்தன் மேல் இராவணன் கொண்டுள்ள நம்பிக்கைதான் எவ் வளவு? ஆம். அவ்வளவிற்கும் தகுதியானவன் தான் மைந்தன். ஆனாலும் என்ன? பகைவரை நன்குணரவில்லை. இவனைக் கொல்வதற் காகவே இலக்குவன் காத்துக் கொண்டிருக் கிறானே! இராவணன் அதனை அறிந்தா னில்லை. எனவே தம்பி ஆணையிட்டு கூறு கிறான்; ''இந்திரன் பகைஞனும்இராமன் தம்பி கைமந்திர வலியினால் மடிதல் வாய்மையால்''. ஒரு வேளை அவ்வாறு நேர்ந்தாலும் நேரலாம். இருப்பினும் என்ன? தன் மேல் தான் கொண் டுள்ள நம்பிக்கையைத் தகர்க்க முடியாதே! எனவே அதற்கும் விடையாக 'என்னைவென்று உளரெனில் இலங்கை காவல, நின்னை, வென்(று) உயருதல் உண்மை' என்றும் கூறி விட்டான். என்ன? இவ்வளவு கூறியும் அவ் விராவணன் கேட்கவில்லையே! சம பலம் உடையவனும், அண்ணன் மாட்டுத் தீராத காதல் உடையவனும் சிறந்த போர் வீரனும் ஆகிய தம்பியே இங்ஙனம் கூறிய பிறகும் ஒருவன் கேட்கவில்லை. அதிலும் கற்றறிவும், கேள்வியறிவும் உடையவனும் சிறந்த கலை யறிவு படைத்தவனும் ஆகிய இராவணன் கேட்கவில்லை என்றால் இதனை என்னென்று கூறுவது? அவனது அறிவு வேலை செய்ய மறுத்து விடுகிறதா? அல்லது, சீதைமாட்டுக் கொண்ட காதல் அவ்வளவு வன்மையுடையதா? இவ்வினாவிற்கு விடை தர நம்மால் இயலாது. இத்தகைய சந்தர்ப்பங்களிற்றான் விதியின் விளையாட்டு நடைபெறுவதாக பெரியோர் கூறுவர். கும்பகருணனும் அதனையே கூறு கிறான்;

''வென்(று) இவண்வருவன் என்று உரைக்கிலேன்
விதி நின்றது பிடர்பிடித்(து) உந்த நின்றது''

விதியின் விளையாட்டே தவிர, இது வேறு அன்று. இறுதியாகக் கும்பகருணன் போருக்குப் புறப்பட்டு விட்டான்; நிச்சயமாக அழியப் போகிறோம் என்று தெரிந்தும் சுத்த வீரனைப் போலச் சாவை வரவேற்கத் துணிந்து புறப் பட்டு விட்டான். செல்லும்போது இறுதியாக அண்ணனிடம் ஒரு வார்த்தை கூறுகிறான்;

''இற்றைநாள் வரைமுதல்யான்முன் செய்தன
குற்றமும் உளவெனிற் பொறுத்தி கொற்றவ!
அற்றதால், முகத்தினில் விழித்தல் ஆரிய
பெற்றனன் விடை ''.

(கும்பகர்ணன் வதைப்படலம் 97)

இத்தகைய அரும் பண்பாடு படைத்த தம்பியை இராவணன் கோபிக் கிறான். அவனுடைய பெருமை எங்கே?

எங்கே? இராவணன் சிறுமை எங்கே? அண்ணன் வாழவேண்டும் என்ற கருத்தோடு நல்லவற்றை சொல்ல அதற்கு இலங்கையர்கோன் இறுக்கும் விடையைக் காண்க:

''மானுடர் இருவரை வணங்கி மற்றுமக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட்டு உய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்கும் மேகடன்
யானது முடிக்கிலேன் எழுதி, போதியால்''.

(கும்பகர்ணன் வதைப்படலம் 92)

என்ன கொடுமை! இராவணன் தான்பேசுகிறானா? வீடணனையும் கும்பகருணனையும் ஒன்றாக்கி விட்டானே! துரோகம் என்பதைக் கனவிலும் கருதாத கும்பகருணனுக்கு இதுவா வெகுமதி? நன்று! நன்று! மதியிழந்தான் இலங்கை மன்னன்; இதுவரை நடந்த போரில் நேரிட்ட அழிவு காரணமாக அறிவு மயங்கி விட்டான். தன்னைத் தான்காத்து அறிவை ஒருவழிப்படுத்தும் தன்மையை இழந்துவிட்டுத் தான் பேசி இருக்க வேண்டும். இன்றேல் ''இறங்கிய கண் முகிழ்த்து இரவும் எல்லியும்உறங்குதி போய்'' என்று மனம் உளையுமாறு கூறுவானா? இலங்கை வேந்தன். அவசரத்தில் அமைதியை இழக்கும் பண்புடையான் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. தன் பிழைக்குத்தானே வருந்துகிறான். இல்லாவிடில் கும்பகர்ணன் 'பிழைபொறுக்க; சென்று வருகிறேன்' என்று கூறிவிட்டுச் சென்றவுடன் ஏன் கண்ணீர் பெருக்க வேண்டும்?

''அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்
செவ்வழிக் குருதிநீ ரொடும் தேக்கினான்''

(கும்பகர்ணன் வதைப்படலம் 90)

இன்னும் முற்றிலும் மனத்தைக் கல்லாக்கிக் கொள்ளவில்லை. காரியம் சாதிக்க வேண்டும் என்ற ஒரே முடிபால் சிறிது அவசரப்பட்டுச் சில சொற்கள் கூறிவிட்டானே தவிரத் தம்பி என்ற அன்பு இன்னும் நீங்கவில்லை.

தன் முன்னவன் எதிரே நின்று, இவ்வளவு அறிவுரைகள் எடுத்துக் கூறிப் போரை நிறுத்துமாறு வற்புறுத்திய கும்பகருணன், வீடணனைக் களத்தில் கண்டவுடன் மாறி விடுகிறான். அண்ணன்மாட்டு அவன் கொண்டுள்ள ஆறாக் காதலை வெளியிடும் சந்தருப்பம் அப்பொழுதன்றோ வாய்க்கிறது? 'வீடணா! உம்பரும், பிறரும் போற்ற ஒருவன் மூவுலகை ஆண்டு தம்பியர் இன்றி மாண்டு கிடப்பனோ தமையன் மண மேல்?'' என்று கூறுகையிற்றான் அத்தகைய அன்பு வெளிப்படுகிறது.

கைகளிரண்டும் அறுபட்டுக் களத்தில் கிடக்கையிற்றான், தான் எவ்வளவு தூரம் இராவணனை அறிந்திருக்கிறான் என்பதை வெளிப்படுத்துகிறான். யாவருந்தொலைதல் உறுதி என்பது பெறப்பட்டுவிட்டது. வீடணனாவது மிஞ்ச வேண்டும் என்ற அவாக் கொண்டான்; அவனைக் காப்பாற்றவேண்டும் என்று இராமனிடம் கூறுமுகமாக மீண்டும் அண்ணனை நினைக்கிறான். உண்மையாகவே இராமன் போரில் வெற்றிபெறத்துணையாக நின்றவன் வீடணன். இவன் தனக்கு உட்பகையாக இருக்கிறான் என்பதை இராவணன் நன்கறிவான். வெற்றியை விரும்பும் அவன் இவனைப்போன்ற உட்பகையைச் சகித்துக் கொண்டிருத்தல் இயலா தன்றோ!

எனவே இவனைக் காணிற்கொல்வான்.

''தம்பிஎன நினைந்(து) இரங்கித்தவிரான் அத்
தகவில்லான்
நம்பி இவன் தன்னைக்காணில் கொல்லும்
இறை நல்கானால்''

(கும்பகர்ணன் வதைப்படலம், 358)

இங்குதான் முதன் முறையாக இராவணனைக் கும்பகர்ணன் 'தகவிலான்' என்று கூறுகிறான். இதுவரை எத்தனையோ அறிவுரைகள் எடுத்துக் கூறியும் அவற்றைக் கேட்கும் மதி அவன்பாலில்லை; தன்னையும் தன் குலத்தையும் அழித்துக்கொள்ள முடிவு செய்துவிட்டான். அருமந்த குமரனையும் பலியிடத் தீர்மானித்து விட்டான். ஒழிந்தார் எல்லார்க்கும் பிதிர்க் கடன் இயற்றவாவது ஒருவன் வேண்டாமா? எத்துணைத் தவறு செய்யினும் உடன் பிறந்தார் மாட்டு நீங்காத காதலுடையவன் கும்பகருணன். இராவணன், வீடணன் என்ற இருவரும் இரு வேறுமுறைகளில் தவறு செய்கின்றனர். ஆனாலும் தவற்றை விட்டு அவர்கள் பால் அன்பு செலுத்தும் தன்மையுடையான் கும்பகர்ணன், ஆனால் இராவணன் அன்பு அவ்வளவு உயர்ந்ததன்று. அன்புடையனாயினும் தன் காரியத்திற்கு அவர்கள் குறுக்கே நிற்கிறார்கள் எனக் கண்டால் அதனைப் பொறுக்கமாட்டான். இத்துணை அன்புடைய கும்பகருணனையே மனம் உளையுமாறு பேசி விட்டானல்லவா? இன்னும் உயிரினும் இனிய மேகநாதனைக் கூட அவ்வாறே பேசுகிறானே! ஏன்? தன் கருத்துக்கு மாறாக அறிவுரை கூறினமைக்கே அவ்வளவு கடிந்து கொள்வானாகில் முழுப் பகைவன்பால் சென்று சேர்ந்துகொண்டு அண்ணனுக்குப் பகையாகச் சூழ்ச்சியும் செய்கிற வீடணனைக் கண்டால் சும்மாவிடுவானோ? அங்ஙனம் அவனை விடாமற் கொல்லினும் இராவணனைப் பெருந்தவறு செய்தான் என்று கூற வியலாதே! அத்தகைய நிலை நேராதிருக்கவே கும்பகருணன் இராமனிடம் வரம் வேண்டுகிறான்.

இவையனைத்தும் கும்பகர்ணனின் மாட்சியைக் காட்டி அவன்மேல் மதிப்பினை நம்மிடத்தில் உண்டாக்குகின்றன அல்லவா!

— — — —

உ

# விவேகானந்தரின் சிந்தனைகள்

டாக்டர் மின்னூர் சீனிவாசன்

தமிழ்த் துறைத் தலைவர்,

அரசினர் கலைக் கல்லூரி, செங்கற்பட்டு.

கோயிலில் வழங்கப்பட்ட திருநீற்றை ஒரு தாய் கைப்பட மூவிரல்களால் தீட்டி உடனடியாக மறுகையின் விரல்களால் நெற்றிப் பரப்பில்வெயில் மறைக்கும் பாவனையில் வைத்தாள்; காட்சிக்குள் படிந்த காரணம் என்னவென்று சிந்தித்தால் ஒரு மணியான புதிர் விளங்கும். நீட்டிய திருநீற்றின் தூள் குழந்தையின் கண்களில் விழுந்தால் கண் கலங்கும் என்பது தாயுள்ளத்தின் கவலை. தாயுள் ளத்தில் இறையன்பு நிறைந்துள்ளது. செயல்களில் அது உறைந்துள்ளது.

அன்பில்தான் மனிதனுக்கு நிறைவு; அறிவு வரம்பு அகன்றதாகையால் வரம்பில்லாதது. ஆகை யால் அதையெட்டுவதும் நிறைவு காண்பதும் அடைய இயலாத இலக்குகள். ஆகவே வாழ்வு தழைப்பது அன்பினால் என்போம். மேலே குறித்த நிகழ்ச்சியைப் போல் பல வாழ்வில் தென்படுகின் றன. மனித வாழ்வைப் பயில வேண்டும். அவ் வாழ்வின் அனுபவங்களும் இயற்கைப் படைப் பின் விரிவுகளும் கவிதை வடிவாகின்றன. விவே கானந்தர் பேசினார்; ''மனிதனைப் பயிலுங்கள். ஏனெனில் மனிதனே ஒரு வாழும் கவிதையாம். (Read the man for he is living poem) உண்மைகளில் சிறந்த உண்மையிது. கவிதை, மொழியில் ஒட்டி யிருப்பதோ, இலக்கிய மரபில் மட்டும் சிக்கி யிருப்பதோ அன்று. மனித வாழ்வே கவிதை. அதன்மொழி வடிவ ஆக்கம், அவ்வுண்மைக் கவிதை யின் நிழல்போலும் ஒரு படைப்பு. விவேகானந்த ரின் வேதாந்த உள்ளத்துக்குக் கவிதைப் பாங்கும் உண்டு என்று உணர்ந்து களிக்கலாம்.

கவியுள்ளத்துடன் பலமுறை கருத்துக்கள் தெரிவித்தவர் விவேகானந்தர். ஞானி விவேகா னந்தர் தாம் முழங்கிய அத்வைதத்தையும்அகண்ட மாக உணர்ந்துரைக்கும் மொழிகள், கவிதை மய மானவை. ஆனால், கவிதைக்குரிய கற்பனை வரம்பில் நின்று விடுபவையல்ல.

பரம்பொருளும் ஜீவான்மாவும் படைப்பில் கலக்கின்றன. ''ஒரே பெருங் கடலில் மலையுயரத் துக்கு எழும் அலையும் உண்டு. சிறிய குழியுமுண்டு கடலாம் மூலம் ஒன்றே'' விவேகானந்தரின் இக் கருத்து கவியுள்ளத்தோடு சிறப்பாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

மனிதனுக்கு கலைக்கான மனப்பாங்கையளிப் பது அவனுள் நிரம்பிய எல்லையற்ற அழகுணர்ச்சித் தாகம். தன்னுள்ளே குடைந்தும் வெளியிற்பரந்த இயற்கையில் விந்தை விரிவுணர்ந்து கண்டும் அடைந்தும் பெற்ற திறமே இலக்கியப்படைப்பின் ஊக்கசக்தியாக எழுகிறது. பாரதத்தை ஊக்கிய ஞானிக்கு இலக்கிய வூக்கம் எப்படி அமைவது என்று தெரிந்திருந்ததில் வியப்பென்ன!



கனல்போலும் கவிதை யுள்ளம், தவக்கனல் போலும் ஞானியின் சித்தம் நிறைந்து, ததும்பி ஒருருவமான விவேகானந்தர் தம் மனத்தைப் பாதித்த ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் கருத்துக்கும் மாற்றம் அளிப்பது போலும், எதிரொலி தருவது போலும், பேசிய கவித்துவக்கனிவு நிரம்பிய மொழிகள் இறவாவரம் பெற்றவை. கனலும் அவர் சித்தம் தகதகத்து வெளிப்படும் சொற்களி லும் சூடு பிறக்கும் உரைகளிலும் தெளிந்துதெரியக் காண்கிறோம். விவேகானந்தரே சொல்வார்; நெருப்பைக்குத்தினால் அது மேலும் கிளர்ந்து எரியும் என்று. அவர்தம், கவிதையுள்ளக் கனலும் புறவுலகப் பாதிப்பினால் மிகவும் கிளர்ந்து மொழி களில் எரிந்து சுடர் விடுகின்றது.

கவிதையுள்ளமும், கனலும் சித்தமும்அமைந்த விவேகானந்தர் உரிமையை விரும்பினார். இதில் முரணோ வியப்போ இல்லை. அவ்வுரிமை அச்சத்தி லிருந்து விடுதலை பெறும் உரிமையாகும். ''அன்பு தான் வழிபாடு; அச்சம்வழி பாடாகாது'' என்று மொழிந்த விவேகானந்தரின் உள்ளம் ஒரு பெருங் கவியின் உள்ளமுமாகும். அவ்வுள்ளக் கனலில் சூடுபெறுவதும் சுடர் விளக்கம் பெறுவதும் நம் கடமை.

— — — — — —



# கடவுள் ஒருவரே சொந்தம்

—இராமகிருஷ்ண பரமஹம்சர்—



இராமகிருஷ்ணர்

ஒரு குருவும் ஒரு சீடனும் பேசிக்கொண்டிருந்தார்கள். குரு, ஆன்மீக வாழ்க்கையின் பெருமைகளையும் உலக மக்களின் போக்கையும் சிஷ்யனுக்கு விளக்கிச் சொன்னார்.

உரையாடல் நீண்ட நேரம் நடந்தது. கடைசியாகக் குரு, ''பாரப்பா, இந்த உலகத்தில் கடவுள் ஒருவர்தான் உனக்குச் சொந்தமானவர். வேறு யாரும் உனக்குச் சொந்தமானவர் இல்லை. உலக மக்கள் யாரும் உண்மையில் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்வதில்லை'' என்று சிஷ்யனுக்கு உபதேசித்தார்.

குரு ஒரு சன்னியாசி. சிஷ்யனோ உறவினர்களுடன் குடும்பத்தில் வாழ்ந்து வந்தான். எனவே, குரு சொன்ன வார்த்தையில் அவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ''காலமெல்லாம் நான் என் குடும்பத்திற்காக உழைக்கவில்லையா? அப்படி இரவும் பகலும் அவர்களுக்காக நான் உழைத்திருக்கும் போது, எனக்கு ஒரு துன்பம் என்றால் அவர்கள் என்னைக் காப்பாற்றாமலா போய் விடுவார்கள்?'' என்று அவன் நினைத்தான்.

ஆகவே, இப்படிப்பட்ட சிந்தனைகளுடன் அவன் குரு சொன்ன உபதேசத்தை மறுத்தான்.

''சுவாமி! என் தாய், மனைவி, மற்றுமுள்ள உறவினர் அனைவரும் என்னை மிகவும் நன்றாக கவனித்துக் கொள்கிறார்கள். என்மீது அளவில்லாத அன்பையே அவர்கள் பொழிகிறார்கள். நான் இல்லாவிட்டால் உலகமே அவர்களுக்கு இருண்டு போய்விடும். எனக்கு ஒரு சிறிய தலைவலி வந்தாலும் என் தாய் எனக்காக உயிரையே விட்டுவிடுவாள். இப்படி எல்லாம் இருக்கும்போது, உலகில் யாருமே எனக்குச் சொந்தமில்லை என்று நீங்கள் சொல்கிறீர்கள்! உறவினர்களைக்கொண்ட பெரிய படையே எனக்கு இருக்கிறது. அவர்கள் யாருமே எனக்குத் துணை வரமாட்டார்கள் என்று நீங்கள் சொல்கிறீர்களே!'' என்று கேட்டான்.

அதற்கு குரு ''அப்பா! நீ சொல்வது உண்மையாக இருந்தால்; அவர்கள் உனக்குத் துணையாக இருப்பார்கள்தாம். ஆனால், இருக்கிற உண்மையை அப்படியே மறைக்காமல் இப்போது உனக்குத் தெளிவாகச் சொல்லி விடுகிறேன். நீ நினைத்துக் கொண்டிருக்கும் கருத்து தவறானது! அவர்களுக்கு உன்மீது உண்மையான அன்பு கிடையாது! மேலும், நீ நினைப்பது போல, உனக்காக அவர்களில் ஒருவரும் தங்கள் உயிரை விட்டுவிட மாட்டார்கள். நான் சொல்வதை நம்பு. உண்மையில் யாரும் யாருக்காகவும் வாழவில்லை! யாரும் யாரையும் நம்பிக் காத்திருக்க மாட்டார்கள்: வேண்டுமானால், நீ நினைக்கும் கருத்து தவறு என்பதைச் சோதித்தே பார்த்து விடலாம்.''

''நான் உனக்கு இப்போது சில மாத்திரைகளைத் தருகிறேன். வீட்டுக்குப் போனதும் அவற்றைச் சாப்பிட்டுவிட்டுப் படுக்கையில் படுத்துக் கொள். நீ இறந்துவிட்டதாக வீட்டில் இருப்பவர்கள் நினைப்பார்கள். ஆனால் உனக்கு வெளியுலக உணர்ச்சி இருந்து கொண்டிருக்கும். அந்த நிலையிலேயே நடப்பவை எல்லாவற்றையும் உன்

னால் காணவும் கேட்கவும் முடியும். அப்போது நான் உன் வீட்டிற்கு வந்து சேருகிறேன்'' என்று சொன்னார். சில மாத்திரைகளைச் சீடனிடம் கொடுத்தார்.

மாத்திரைகளைப் பெற்றுக் கொண்ட சீடன் வீடுபோய்ச் சேர்ந்தான்.

குருநாதர் சொன்னபடியே அவன் மாத்திரைகளை விழுங்கிவிட்டுப் படுக்கையில் படுத்துக் கொண்டான். அவன் உணர்ச்சியில்லாமல் இறந்துவிட்டவனைப் போல இருப்பதை வீட்டில் இருப்பவர்கள் பார்த்தார்கள்.

அவனைச் சுற்றி மனைவி, மக்கள், உற்றார், உறவினர் என்று இருக்கப்பட்டவர்கள் எல்லாருமே கூடிவிட்டார்கள். அனைவரும் சேர்ந்து கோவென்று கதறி அழ ஆரம்பித்தார்கள்.

அப்போது குரு அங்கே வந்து சேர்ந்தார். அவர்களுடைய துன்பத்திற்குக் காரணம் என்ன என்று விசாரித்தார். வீட்டில் இருப்பவர்கள் நடந்ததை விவரமாக எடுத்துச் சொன்னார்கள்.

குரு அவர்களிடம் ''இவனைப் பிழைக்க வைக்க ஒரே வழிதான் உண்டு. என்னிடம் அபூர்வமான ஒரு மருந்து இருக்கிறது. அதைக் கொண்டு இவனைப் பிழைக்க வைக்க முடியும். ஆனால் உண்மையை நான் முதலிலேயே நிச்சயமாகச் சொல்லி விடுகிறேன். நான் கொடுக்கும் மருந்தை இவனுடைய உறவினர்களில் யாராவது ஒருவர் முதலில் சாப்பிட வேண்டும். பிறகு அதைப் படுத்துக் கிடக்கும் இவனுக்குக் கொடுத்தால் பிழைத்துக் கொள்வான். ஆனால், முதலில் மருந்தைச் சாப்பிடும் உறவினர் கட்டாயமாக இறந்து போய் விடுவார். இங்கே இவனுடைய பல உறவினர்கள் கூடியிருக்கிறீர்கள். உங்களில் ஒருவர் இறந்துபோக முன் வந்தால் இவனைப் பிழைக்க வைப்பது சாத்தியமாகும்'' என்று சொன்னார்.

அவர் சொன்னதைக் கேட்டதும் அழுது கொண்டிருந்தவர்களுடைய அழுகை நின்றுவிட்டது. எல்லோரும் திடுக்கிட்டார்கள். 'எங்கே இவர் மருந்தை நம்மைச் சாப்பிடச் சொல்வாரோ'' என்ற திகில் அவர்களைச் சூழ்ந்து கொண்டது போலும். சீடன் நடப்பதை எல்லாம் கேட்டுக் கொண்டே படுத்திருந்தான். ஒருவரும் பதில் பேசாமல் மௌனமாக இருந்தார்கள்.

முதலில் குரு சீடனுடைய தாயை அழைத்தார். அவளுக்குப் புத்திரபாசம் பொங்கியது. தரையில் உருண்டுகொண்டு அவள் அழுதாள். மகனை நினைத்து ஓலமிட்டாள். அவளிடம் அவர் 'அம்மா! இப்படிப் புரண்டு அழுவதால் பயன் ஏற்படப் போவதில்லை. இந்தத் தள்ளாத வயதில் உன்னைக் காப்பாற்றி வந்த உன் மகனே போய் விட்டான். இனிமேல் நீ இருப்பதும் ஒன்றுதான்; இறப்பதும் ஒன்றுதான். இனிமேல் நீ அழ வேண்டியதில்லை. இந்த மருந்தை உட்கொண்டு நீ இறந்து போனால், நீ பெற்ற மகன் பிழைத்துக் கொள்வான். ஆனால் நான் முதலில் சொன்னபடி நீ உறுதியாக இறந்துவிடுவாய். தாயான நீயே உன் மகனுக்காக இப்படிப்பட்ட உதவியைச் செய்யாமல் போனால், வேறு யார் அம்மணி செய்யப் போகிறார்கள்?'' என்று கேட்டார்.

தாய் மருந்தைக் கையில் வாங்கிக்கொண்டாள். சிறிது நேரம் யோசித்தாள். பிறகு, 'சுவாமி! எனக்கு இன்னும் சில குழந்தைகளும் இருக்கிறார்கள். அவர்களைப் பற்றியும் நான் யோசிக்க வேண்டியவளாக இருக்கிறேன். நான் இறந்துவிட்டால் அவர்களுடைய கதி என்ன ஆவது? இந்தச் சிந்தனை தான் என்னைத் தடுத்து நிறுத்துகிறது'' என்று ஒரு காரணத்தைச் சொன்னாள். மருந்தைக் குருவிடமே திருப்பியும் கொடுத்தாள்.

குரு அடுத்ததாக, இறந்துவிட்டவனைப் போலப் படுத்திருந்தவனின் மனைவியை அழைத்தார். ''தாயே! உன் மாமியார் மருந்தைச் சாப்பிட மறுத்துவிட்டாள். நீயாவது இந்த மருந்தைச் சாப்பிட்டு உன் கணவனுக்கு உயிர்ப் பிச்சைகொடு அம்மணி! கணவனைக் காத்த காரிகை என்று உலகமே உன்னைக் கொண்டாடும்; உத்தமி என்று பாராட்டும்'' என்று சொல்லி மருந்தை அவளிடம் கொடுத்தார்.

இதுவரையிலும் ஒப்பாரி வைத்துக்கொண்டிருந்த அவள் மருந்தைச் சிறிது நேரம் கையில் வைத்து யோசித்தாள். மருந்தைச் சாப்பிடுபவர்கள் இறந்து விடுவார்கள் என்பது அவளது காதிலும் விழுந்திருந்தது.

அவள், அழுதுகொண்டே 'சுவாமி, விதிப்படி அவருக்கு மரணம் நேர்ந்தது. ஏதோ காலம் வந்து அவர் போய்விட்டார். நானும் இப்போது இறந்து போய்விட்டால், என் பெற்றோர்களுடைய கதி என்ன ஆகும்? அவர்களை யார் கவனித்துக் கொள்வார்கள்?'' என்று சொன்னாள்.

இப்படியாக ஒவ்வொருவரும் ஒரு காரணத்தைச் சொன்னார்கள். அத்தனையும் புதுமையான காரணங்கள்; விதவிதமான காரணங்கள். அவர்கள் வாயிலிருந்து அப்போது பெரிய பெரிய தத்துவங்கள் எல்லாம் வெளிவந்தன. கடைசி வரையில் ஒருவருமே தமது உயிரை இழக்க முன் வரவில்லை. மருந்தைச் சாப்பிட மறுத்துவிட்டார்கள்.

நடந்தவற்றை எல்லாம் சீடன் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்தான். உண்மையிலேயே தனக்குச் சொந்தமானவர் யாரும் இல்லை என்ற உண்மை அப்போது அவனுக்குத் தெரிந்துவிட்டது.

சீடன் படுக்கையை விட்டு எழுந்தான். அப்போதே குடும்ப வாழ்க்கையை விட்டுக் குருவைத் தொடர்ந்து சென்றுவிட்டான்,

— — — —



# மன்பதை காக்கும் ஒன்பது துர்க்கை

டாக்டர் பருத்தியூர்
கே. சந்தானராமன்



அம்பிகையின் திருவிளையாடல்களில் அவள் மகிடனை வதைத்த வரலாறு முக்கிய மானதாகும். 'ரம்பன்' என்பவன் சூரியதேவ னின் வரத்தின் மூலம் மிக்க பராக்கிரமமுடைய மகிடனைப் பெற்றான். காட்டெருமை ஒன் றினை ரம்பன் காமுற்று அதனிடம் மகவைப் பெற்றான். எருமை முகத்துடன் தோன்றிய மகிடாசுரனும் தவமியற்றி எவராலும் மரண மில்லாத வரத்தினைப் பெற்றான். பெண்டிர் யாரும் தன்னைக் கொல்லத்தக்க ஆற்றல் பெற் றிலர் என்று எண்ணிய மகிடன் அவ்வாறு தனக்கு மரணம் ஏற்பட்டால் அது ஒரு பெண் ணால்தான் அமையவேண்டுமென்றும் வேண்டி யிருந்தான்.

மூவரும் தேவரும் வேண்ட அன்னை லட்சுமி, சரஸ்வதி, கௌரி ஆகிய மூவரின் சமஷ்டி(கூட்டு) அம்சமாக பதினெட்டுக் கரங் களுடன் துர்க்கை என்ற பெயருடன் தோன்றி னாள். அவளையே தமிழில் 'கொற்றவை' என் கிறோம்.

பின்னர், துர்க்கை போர்க்களம் புகுந்து மகிடனை வதைத்து அவன் தலைமீது திருவடி பதியநின்றாள். அன்றிலிருந்து அவள் மகிடா சுரமர்த்தினி ஆனாள். 'மகிடற் செற்றுதிகழ் நீலி' எனத் தேவாரமும் 'மகிடற் காய்ந்தாள்' என திவாகரநிகண்டும் குறிப்பிடுகின்றன.

எருமை என்பது அறியாமையின் சின்னம். அம்பிகையின் திருவடிபட்டு அறியாமை நீங்கு கிறது என்பதே இவ்வரலாற்றின் உட்கருத் தாகும். சிவபெருமான் முயலகனை அடக்கிய தும், முருகன் ஆட்டுக்கடாவை அடக்கியதும் இதே தத்துவத்தினை விளக்கும் வரலாறுகளே ஆகும்.

'துர்க்கா, துக்கஹந்ரி' என்று அவளை லலிதா சகஸ்ரநாமம் போற்றுகிறது. துக்கத் தைப் போக்குவதால் துர்க்கை என்றனர். மற் றும் 'துர்க்கம்' என்றால் அகழி என்று பொருள் படும். பல வகையான பகைகளிலிருந்தும் நம் மைக் காப்பாற்ற அவள் அகழியினைப்போல் அரணாக இருப்பதால் துர்க்கை எனப் பட் டார். 'துர்க்கா சூக்தம்' என்ற வேதத்தின் பகுதி துர்க்கையினைப் புகழும் பகுதியாகும். அவளது பிரதான மூர்த்தம் மூலதுர்க்கை எனவும் வெவ்வேறு நிலையில் தோன்றிய அம்சங்கள் 'நவதுர்க்கை' எனவும் போற்றப் படுகின்றன.

1. வனதுர்க்கை

வனதுர்க்கை என்பதால் 'வனத்தில் இருப் பவள்' என்பது பொருளல்ல. சம்சாரமாகிய வனத்தை-காட்டை அழிப்பவள் என்பது பொரு ளாகும். 'பவாரண்யகுடாரிகா' என சகஸ்ர நாமம் கூறும். அதாவது பவவினையாகிய காட்டை அழிக்கும் கோடாரி என்கிறது. கம்ப னுக்கு அருட் செய்த கதிராமங்கலம் வனதுர்க் கையும், வேதாரணியம் வனதுர்க்கையும் பிர பலமானவர்கள். வனதுர்க்கா மூலமந்திரத்தி னால் ஆதிசங்கரர் சரஸ்வதியின் அம்சமான சரசவாணி என்பவளைக் கட்டி வந்து சிருங் கேரியில் சாரதையாக ஸ்தாபித்தார் என்பது வரலாறு.

2. சூலினி துர்க்கை

திரிபுரமென்னும் முப்புரம் எரிக்க இறை வன் சென்றபொழுது தானும் சூலபாணியாக புறப்பட்ட கோலத்தில் அம்பிகை 'சூலினி' துர்க்கை எனப்பட்டாள்.

3. ஜாதவேதோ துர்க்கை

குமாரசம்பவம் என்னும் திருமுருகன் தோற்றத்தின்பொழுது சிவபெருமான் தனது நெற்றிக் கண்களிலிருந்து ஆறு தீப்பொறிகளை உண்டாக்கினான். அவற்றினைச் சரவணத்தில் சேர்ப்பிக்குமாறு அக்கினி பகவானுக்கும் வாயு தேவனுக்கும் கட்டளையிட்டான். அப்போது அப்பொறிகளைத் தாங்கி, கொண்டு சென்று சரவணத்தில் விடுக்கும் ஆற்றலை அக்கினிக்கும்

வாயுவுக்கும் வழங்கினாள் அம்பிகை. அக் கோலத்தில் அவள் ஜாதவேதோ துர்க்கை என அழைக்கப்பட்டாள்.

4. சாந்திதுர்க்கை

தட்சயாகத்தின் பொழுது இறைவன் கொண்ட சினத்தைத் தணித்தவள் (சாந்தி செய்தவள்) அம்பிகை. மற்றும் நோய் துன்பம் முதலான பீடைகளை அழித்து சாந்தியை அருளுபவள் சாந்தி துர்க்கையாவாள்.

5. சபரிதுர்க்கை

இறைவன் அருச்சுனனுக்குப் பாசுபதம் அளிக்க வேட்டுவக்கோலத்தில் சென்றான். அப்போது அம்பிகையும் வேட்டுவச்சி(சபரி) யாகச் சென்றாள். அந்த நிலையில் அவளுக்கு 'சபரி துர்க்கை' என்று பெயர்.

6. ஜ்வாலா துர்க்கை

அம்பிகை பண்டாசுரனுடன் போரிட்ட பொழுது தனது படைகளைக் காக்க, தானே போர்க்களத்தைச் சுற்றித் தீப்பிழம்பாக (ஜ்வாலையாக) நின்றாள். ஜ்வாலையாக நின்று படைகளைக் காத்த அவளை 'ஜ்வாலாதுர்க்கா' என்றனர்.

7. லவண துர்க்கை

இராமபிரான் அரசாண்ட காலத்தில் 'லவணாசுரன்' என்னும் அரக்கன் தோன்றி இன்னல் கொடுத்துவந்தான். அவனை வென்று வர சத்ருக்குனனை அனுப்பினார். இராமர் தனது தம்பி சத்ருக்குனனின் வெற்றிக்காகவும் லவணாசுரனின் அழிவிற்காகவும் அப்பொழுது பூஜித்த துர்க்கையே லவணதுர்க்கை எனப்பட்டாள்.

8. ஆசுரிதுர்க்கை

பாற்கடலில் கிடைத்த அமுதினைத் தேவர்களுக்கு மட்டும் அளிக்க விரும்பிய திருமாலுக்கு உதவியவள் ஆசுரி துர்க்கையாவாள். அசுரர்கள் மயங்கவும் திருமால் மோகினிவடிவு கொள்ளவும் உதவினாள் இவள்.

9. தீபதுர்க்கை

குண்டலினி யோகிகள் யோகத்தில் திறமை பெற உள்ளுணர்வான ஞான ஒளியைக் கொடுக்கும் விளக்குப் போல் இருந்து உதவும் நிலையில் அம்பிகை தீபதுர்க்கை எனப்பட்டாள்.

மேலும் துர்க்கை வெற்றியைத் தருவதால் 'ஜெயதுர்க்கை' எனவும் பதினெட்டுக் கரங்கள் கொண்ட அஷ்டாதசபுஜ துர்க்கையென வும்இராகு காலத்தில் வணங்க அருளுவதால் இராகுகால துர்க்கை யெனவும். சண்டமுண்டர்களை அழித்ததால் சாமுண்டி எனவும், சிவந்த நிறம் உடைமையால் 'கெம்பம்மா' எனவும் பலவாறு அழைக்கப்படுகிறாள்.


கி.பி.1678 - சென்னை காளி - சிவாஜி மகாராஜா தரிசித்தது

வைஷ்ணவி, விஷ்ணுதுர்க்கை, நாராயணி என்றெல்லாம் புகழப்படுபவளும் துர்க்கையே.

துர்க்கைக்கு உரியதிதி அஷ்டமியாகும். துர்க்காஷ்டமி என்பது சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. நவராத்திரியில் முதல் மூன்று நாட்கள் துர்க்கை வழிபாட்டுக்குகந்த நாட்களாகக் கருதப்படுகிறது.

செவ்வாய் தோஷம் முதலிய காரணங்களால் தடைப்பட்ட திருமணங்கள் நிறைவேறவும் எடுத்த காரியம் யாவும் வெற்றி பெறவும் துர்க்கையினை வழிபட்டுப் பயனடைந்து வருவோர் பலர்.

— — — —



# வழிபாட்டைப் பற்றிய விளக்கம் !



மகாத்மாகாந்தி

சபர்மதியில், சத்தியாக்கிரக ஆசிரமத்தில் கூடிய கூர்ஜர மாணவர் இல்லத்தைச் சேர்ந்த சிறுவர் மகாநாடாகிய சத்ர சம்மேளனத்தில் காந்திஜி வழிபாட்டைப் பற்றி ஒரு விரிவுரைஆற்றினார். அதன் சாராம்சம் வருமாறு:

'வழிபாடு என்பதன் பொருளென்ன? ஏன் வழிபாடு செய்ய வேண்டும்?' என்பதை பற்றி என்னைப் பேச சொல்லுகிறீர்கள். இது எனக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. சமயத்தின் உயிர் நாடியாகவும் அதன் சாராம்சமாகவும் வழிபாடு இருக்கிறதென்று நான் நம்புகிறேன். ஆதலால், வழிபாடு என்பது மனித வாழ்க்கைக்கு உயிராய் அமையவேண்டும்; மதம் இன்றி எந்த மனிதனாலும் வாழ முடியாது. எங்களுக்கு மதம் தேவையில்லை யென்று அறிவின் மமதையினால் சிலர் கூறுகிறார்கள். இது எப்படியிருக்கிறதென்றால், நான் சுவாசிக்கிறேன். ஆனால் எனக்கு மூக்கு இல்லை என்று சொல்லுவதைப் போல் இருக்கிறது. தெய்வீக சக்தியோடு ஏதோ ஒருவகைத் தொடர்பு இருக்கிறதென்பதை அறிவினாலோ, இயற்கை உணர்ச்சியினாலோ, அல்லது மூடநம்பிக்கையாலோ, மனிதன் ஒப்புக் கொள்ளுகிறான். தீவிரமாக, கடவுள் இல்லை யென்று மறுக்கும் நாஸ்திகன்கூட, வாழ்க்கையில் ஒருவித ஒழுக்க வரம்பு வேண்டும் என்பதை ஏற்றுக் கொள்ளுகிறான்; அந்த ஒழுக்கவரம்பின் பிரகாரம் நடத்தால்நன்மை ஏற்படுகிறதென்றும், நடக்காவிட்டால் தீமை ஏற்படுகிறது என்றும் எண்ணுகிறான். பிராட்லா என்பவர் பெரிய நாஸ்திகர் என்பது பிரசித்தம். தமது உள்ளுணர்ச்சியில் தோன்றும் எண்ணங்களை அப்படியே வெளியிட்டுச் சொல்லிவிட வேண்டும்என்று அவர் எப்போதும் வற்புறுத்துவது வழக்கம். மனதில் தோன்றிய உண்மைகளை இவ்விதம் வெளியிட்டுச் சொல்லியமைக்காக அவர் எவ்வளவோ துன்பங்களையெல்லாம் அனுபவித்தார். ஆனால், அப்படி அனுபவிப்பதில் ஓர்வித ஆனந்தம் இருப்பதாகக் கண்டார். உண்மையைக் கடைப்பிடித்து நடப்பதனால் கிடைக்கும் நன்கொடை உண்மையேயாகும் என்று அவர் சொல்லுவது வழக்கம். உண்மையைக் கடைப்பிடித்து ஒழுகுவதனால் உண்டாகிற ஆனந்தத்தை அவர் முற்றிலும் அனுபவிக்கவில்லையென்று இதனால் எண்ணி விடக் கூடாது. எப்படி இருந்தபோதிலும், இந்த ஆனந்தம் இகத்தை ஒட்டியதன்று; தெய்வீக சக்தியோடு ஒன்றுபடுவதினால் ஏற்படுகிற ஆனந்தம் இது. இதுபற்றியே மதம் வேண்டாம் என்று சொல்லுகிறவன்கூட மதமில்லாது வாழ முடியாது; வாழவில்லையென்று சொன்னேன்.



இனி, அடுத்த விஷயத்திற்குச் செல்லுகிறேன். அதாவது, சமயத்தின் உயிர்நாடியாக இருப்பதைப் போலவே, மனித வாழ்க்கையின் உயிர்நாடியாகவும் வழிபாடு இருக்கிறதென்ற விஷயம். குறையிரத்தல் என்ற முறையிலோ அல்லது இன்னும் விரிந்தபொருளில் சொல்லின் ஆன்ம ஒருமைப்பாட்டுக்காகவோ நாம் வழிபாடு செய்கிறோம். இந்த இரண்டு நிலைகளிலும் இறுதியில் அடையும் பயன் ஒன்றுதான். குறையிரத்தல் என்ற முறையில் வழிபாடு செய்யும்போது அடுக்கடுக்காக ஆன்மாவைச் சூழ்ந்து அதை மறைத்துக் கொண்டிருக்கும் அறியாமையையும் இருளையும் நீக்கிவிட வேண்டும் என்றும், ஆன்மாவைச் சுத்தம் செய்து புனிதமாக்கிவிட வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டு வழிபாடு செய்ய வேண்டும். ஆகையால் நம்முன் இருக்கிற தெய்வாம்சம் விழிப்புற வேண்டுமென்ற ஆர்வமுடையவர்கள் வழிபாடு செய்தே ஆக வேண்டும். சொற்களை உச்சரிப்பதும் கேட்பதும் வழிபாடாகாது; வெறும் சொல்லடுக்குகளைத் திருப்பித் திருப்பி எத்தனை தரம்தான் செபித்தாலும், அதனால் ஒரு பயனும் இல்லை. வழிபாடு செய்யும்போது, இதயநெகிழ்ச்சி ஏற்படாமல் சொற்களைச் சொல்லுவதைவிட சொற்களில்லாமல் இதயநெகிழ்ச்சி ஏற்படுவது எவ்வளவோ சிறப்புடையது. வழிபாடு செய்ய வேண்டும். வழிபாடு செய்ய வேண்டுமென்று உள்ளத்திலே ஒரு தவிப்பு ஏற்பட்டு, அந்தத்தவிப்பு, சாந்தியடையும் வகையில் வழிபாடு அமையவேண்டும். பசியெடுத்தவன், நல்ல ஆகாரம் கிடைத்தவுடன் அதை எவ்வளவு சுவையோடு புசிப்பானோ, அதேபோல, ஆன்மத் தவிப்பெடுத்த உயிரானது, இதயபூர்வமாகச் செய்கிற வழிபாட்டிலே ஈடுபடுகிறது. வழிபாட்டிலுள்ள மந்திர சக்தியை அனுபவித்தோர், நாட்கணக்காக உணவில்லாமல் உயிர்வாழ முடியும்; ஆனால் வழிபாடு இன்றி அவர்களால் ஒரு கணம் கூட வாழ முடியாது. என்னுடைய அனுபவத்தையும் எனது

சகாக்களின் அனுபவத்தையும் கொண்டே நான் இதைச் சொல்லுகிறேன். ஏனெனில், வழிபாடு இல்லாத உள்ளம் அமைதி பெறாது.

இது உண்மையானால், வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் நாம் வழிபாடு செய்தாக வேண்டுமே என்று சிலர் கேட்கலாம். இதைப்பற்றி சிறிதும் சந்தேகம் இல்லை. ஆனால் தவறான நெறியில் செல்லும் இயல்புடைய மனிதர்களாகிய நாம் வேறு வேலைகளையெல்லாம் அப்படியே ஒதுக்கி வைத்து விட்டு இறைவனோடு ஒன்றி நிற்கும் பொருட்டாய் மனத்தை ஒரு கணமேனும் கட்டுப்படுத்தி வசப்படுத்த இயலாதவராய் இருக்கிறோம். எனவே, இறைவனோடு எப்போதுமே ஒன்றி நிற்பது நமக்கு இயலாத ஒரு காரியமாய் இருக்கிறது. அது காரணமாகவே, கொஞ்ச நேரத்திற்காவது உலகப்பற்றுதல்களை அகற்றிவிட எண்ணி, அதாவது இந்த உடலை மறந்து, உள்ளத்தோடு மட்டும், ஒன்றி நிற்க கடுமையாக முயலுகிறோம். இதற்காகக் குறிப்பிட்ட சில வேளைகளை வழிபாட்டுக்கென்று ஒதுக்கி வைக்கிறோம். சூர்தாசருடைய கீதத்தை நீங்கள் கேட்டிருப்பீர்கள். பரம்பொருளோடு கலக்க வேண்டும் என்று ஆன்மாவுக்கு உள்ள தவிப்பை —உணர்ச்சி ததும்பஆன்மா கதறுவதை—அந்தக் கீதம் வெளியிடுகிறது. நாம் அவரை ஒரு சிறந்த அடியாராகக் கருதுகிறோம். ஆனால், அவரோ, தம்மை வெளிப்படையாகப் பாவி என்றே சொல்லிக் கொண்டார். ஆன்ம நெறியிலே நம்மைவிட அவர் எவ்வளவோ தூரம் முன்னே சென்றிருந்தார். இருந்தும் இறைவனிடமிருந்து பிரிந்த துக்கத்தை அவரால் சகிக்க முடியவில்லை; கடவுளின் பிரிவாகிய ஆற்றொணாத துன்பத்தைச் சகிக்க முடியாமல், நம்பிக்கையிழந்து நம்மையே வெறுத்த நிலையில் அவர் இவ்வாறு கதறினார்.

வழிபாடு எவ்வளவு இன்றியமையாதது என்பதைச் சொல்லி அதன் மூலம், முக்கியமாக வழிபாட்டின் சாராம்சத்தையும் பற்றிச் சொன்னேன். மனித வர்க்கத்திற்கு சேவை செய்யவே நாம் பிறந்திருக்கிறோம். தக்க முறையில் இச்சேவையைச் செய்வதற்கு நாம் நன்கு விழிப்புடன் இருக்க வேண்டும். இல்லையேல், நம்மால் சேவை செய்ய முடியாது. மனிதனுடைய மனதில் இருளுக்கும் ஒளிக்கும் இடையே நிரந்தரமாக ஒரு போராட்டம் நடைபெறுகிறது. வழிபாடு என்ற சிறந்த பாதுகாப்பை நம்பியிராதவன் இந்தப் போரில்இருளுக்கு அடிமையாகிவிடுவான். வழிபாடு செய்பவன் மனச்சாந்தி பெற்று, உலகத்தோடு மனமொத்த அன்பு பூண்டு வாழ்வான். வழிபாட்டில் ஈடுபடும் இதய நெகிழ்ச்சி இல்லாதவன் லௌகிக விஷயங்களில் அழுந்தி, தன்னையும் துன்பத்திலாழ்த்தி, உலகத்தையும் துன்பத்தில் ஆழ்த்துவான். இறந்த பிறகு வழிபாட்டினால் நன்மை ஏற்படும் என்பது ஒருபுறமிருக்க, இந்த உலகத்திலேயே மனிதனுக்கு அதனால் அளவற்ற நன்மைகள் உண்டு. நாள்தோறும் நாம் செய்கிற செயல்களில் ஒழுங்கையும் அமைதியையும் ஒய்வையும் நிலைபெறச் செய்வதற்கு, வழிபாடுதான் சிறந்த சாதனமாகும். இந்த ஆசிரம வாசிகளாகிய நாம் உண்மையையே நாடி அதன் வழியே நிற்பதென்ற உறுதியோடு இங்குவந்தோம். அப்படி வந்த நாம், வழிபாட்டினால் சிறந்தநலன் ஏற்படும் என்று நம்புவதாகச் சொல்லிக்கொண்டோம். ஆனால், நெடுங்காலம் வரை, வழிபாட்டை முக்கிய விஷயமாகக் கருதாமல் இருந்து விட்டோம். மற்ற விஷயங்களில் கவனம்செலுத்திய அளவு, வழிபாட்டில் நாம் கவனம் செலுத்தவில்லை. இந்த உறக்கத்திலிருந்து ஒரு நாள் நான் விழித்துக் கொண்டேன்; இந்த விஷயத்தில் எனது கடமையைச் செய்வதில் மிக்க வருந்தத்தக்க முறையில் தவறிவிட்டதாக உணர்ந்தேன். எனவே இந்த நிலையைச் சீர்திருத்தும் பொருட்டு, கடுமையான கட்டுப்பாட்டை எல்லோரும் பின்பற்ற வேண்டுமென்று சொன்னேன். இந்தக் கட்டுப்பாட்டைப் பின்பற்றியதனால், நமது நிலை முன்னைய நிலையைவிடச் சிறப்புடையதாகியிருக்கிறதேயொழிய கெட்டுப் போகவில்லை என்றே நம்புகிறேன். இது வெளிப்படையாகவே தெரிகிறது. பிரதானமான விஷயத்தை முதலில் கவனித்தால், மற்றவை தாமே ஒழுங்குபட்டு வரும். நாற்கோணமான சதுரத்திலே, ஒரு கோணத்தை நிமிர்த்திவிட்டால், மற்றக்கோணங்கள் தாமாகவே நிமிர்ந்துவிடும்.

ஆகையால், தினசரி வாழ்க்கையில், முதல் வேலையாக வழிபாடு செய்யுங்கள். மாலை வரை வழிபாட்டு உணர்ச்சி உங்களை விட்டு அகலாதவாறு இதய நெகிழ்ச்சியோடு வழிபாடு செய்யுங்கள். எல்லாவிதத் தீய எண்ணங்களும் பயங்கரமான கனவுகளும் இல்லாமல் அமைதியோடு உறங்குவதற்கு அனுகூலமாக, நாள்தோறும் மாலையில் வழிபாடு செய்து அன்றாட வேலைகளை ஒரு முடிவுக்குக் கொண்டு வாருங்கள். வழிபாடு என்ன உருவத்தில் இருக்க வேண்டுமென்பதைப் பற்றிய கவலை வேண்டாம். எந்த உருவத்தில் நடைபெறினும் சரியே, பரம்பொருளோடு நம்மை ஒன்றுபடுத்தக்கூடிய முறையில் வழிபாடு இருந்தால் போதும். முறை எப்படியிருந்தபோதிலும், வாயிலிருந்து சொற்கள் வெளிவரும்போது மனம் அலையாமலிருக்கிறதா வென்பதை மட்டும் கவனத்தோடு பார்த்துக்கொள்ளுங்கள்.

நான் சொன்னது உங்கள் மனதில் பதிந்துவிட்டால், வழிபாட்டில் சிரத்தை கொண்டு அதை மாணவரின் கட்டாயமான கடமையில் ஒன்றாக ஆக்கும்படி, உங்கள் மாணவர் இல்லத்தின் கண்காணிப்பாளர்களை நீங்கள் நிர்ப்பந்திப்பீர்கள்; அப்படிக் கட்டாயமானால்தான் உங்களுக்கு அமைதி ஏற்படும். தானாகவே ஏற்படுத்திக் கொள்ளுகிற கட்டுப்பாடு நிர்ப்பந்தமானதன்று. ஆன்ம அடக்கமில்லாமல், மனதில் தோன்றுவதையெல்லாம் செய்கிறவன் அதாவது இன்ப நுகர்ச்சியில் அழுந்திச் சுகமாக வாழ எண்ணுகிறவன், ஆசைகளுக்குக் கொத்தடிமையாகிறான்; ஆனால் சில விதிகளையும் கட்டுப்பாடுகளையும் அமைத்துக் கொண்டு, அவற்றிற்கு உட்பட்டு ஒழுகுபவனோ என்றால், தன்னையே விடுதலை செய்துகொள்ளுகிறான். இந்தப் பிரபஞ்சத்திலுள்ளவையாவும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவை அனைத்தும் சில விதிகளுக்கு உட்பட்டே நடக்கின்றன. இந்த விதிகளினால் ஏற்படும் கட்டுப்பாடு இல்லாவிட்டால் உலகம் ஒரு கண நேரம்கூட நடைபெறாது. மனித வர்க்கத்துக்குச் சேவை செய்வதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டுள்ள நீங்கள், ஏதாவது ஓர் ஒழுங்கை ஏற்படுத்திக் கொள்ளாவிட்டால், சிதறுண்டு போவீர்கள். ஆன்ம நெறியில் கட்டுப்பாடுடன் இருப்பதற்கு வழிபாடு மிக்க அவசியமானது. நாமாக ஏற்படுத்திக் கொள்ளும் கட்டுப்பாடும் ஒழுங்குமே நம்மை மிருகத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றன. நான்கு கால்களால் நடக்கும் விலங்குகளா யிராமல் நிமிர்ந்து நடக்கும் மனிதர்களாயிருக்க விரும்பின், நாம் இந்த உண்மைகளை அறிந்து கொள்ள வேண்டும். அறிந்து கொண்டு, நமக்கு நாமே சில கட்டுப்பாடுகளையும் ஒழுக்க முறைகளையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

— — — —

# யாழ்ப்பாணம் நல்லூர் கந்தசாமிக் கோவில்

சி. குமாரசாமி, எம்.ஏ.,
யாழ்ப்பாணம்.

ஓம்! ஓம்! என்று அசையா மணிகள் (கண்டாமணிகள்) ஆறும் ஒலிக்கின்றன. மேள வாத்தியங்கள் முழங்குகின்றன. சங்கின் நாதமும் அடியார்களின் பக்திப்பரவசப் பட்ட ''அரோகரா'' ''முருகா'' ''ஷண்முகா'' என்ற குரல்களும் பின்னிப் பிணைகின்றன. இன்னும், ''இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால், துன்னிய பிணை மலர்க்கையினர் ஒருபால், துவள்கையர் அழுகையர் தொழுகையர் ஒருபால், சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்'' என்றவாறு மக்கள் வெள்ளம் அலை மோதிக் கொண்டிருக்கிறது. ஆம்! நல்லூர்க் கந்தனின் கொடியேற்றுவிழா நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. குறித்த நேரத்திலே குறிக்கப்பட்ட நிகழ்ச்சி நடைபெறுவதைக் கண்காணிப்பதற்கு ஆலயக் காவலர் உயர்திரு குமாரதாச மாப்பாண முதலியார் அவர்கள் ஆசாரசீலராய், விபூதி திரிபுண்டரமாகத் தரித்த வண்ணம் கண்டிகை கழுத்தில் அணிந்து காணப்படுகிறார்.

இவையாவும் யாழ்ப்பாணம் நல்லூரில் கோயில் கொண்ட கந்தன் ஆலயத்தில் வருடா வருடம் நடைபெறுகின்றன. நல்லூர், யாழ்ப்பாணப் பட்டினத்திலிருந்து ஒரு கல் தொலைவிலுள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊராகும். அது பிரசித்தி பெற்ற தமிழ் மன்னர்



யாழ்ப்பாணம் நல்லூர் கந்தசாமிக் கோயில்

களான பரராசசேகரன், சங்கிலியன் போன்றோரின் இராசதானியாக ஒரு காலத்தில் விளங்கியது. இப்பொழுதும் சங்கிலியனின் இடிந்த மாளிகை, சங்கிலித் தோப்பு, யமுனாரி போன்ற நினைவுச்சின்னங்கள் கோயிலுக்கு அருகாமையில் இருப்பதைக் காணலாம். இம்மன்னர்களால் அமைக்கப்பட்ட கைலாசநாதர் ஆலயமும் சட்டநாதர் ஆலயமும் இப்பொழுதும் பொலிவுடன் காணப்படுகின்றன.

பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் புவனேகபாகு என்ற பௌத்த சிங்கள மன்னனின் வளர்ப்பு மகனான சப்புமால் குமரையன் என்பான் தமிழர்கள் மீது படையெடுப்பதற்காக யாழ்ப்பாணம் அனுப்பப்பட்டான். ஆனால், அங்கு சென்ற ஓரிரு நாட்களில் அவன் மனம் திடீர் மாற்றமடைந்தது. அவன் போரை மறந்தான். தெய்வச் சிந்தனை அவனை ஆட்கொண்டது. ஆலயம் ஒன்று அமைக்க விழைந்தான். ஆகவே வளர்ப்புத்தந்தையின் அனுமதியும் பொருளும் பெற்று இம்முருகன் ஆலயத்தை உருவாக்கினான். இன்றும் வருடாந்திர திருவிழாக் காலங்களில் 'கட்டியம்' ஓதப்படும் போது ''புவனேகபாகு சமுகா'' என்று வாக்கியங்கள் ஒலிப்பதை நாம் கேட்கலாம்.

16ம் நூற்றாண்டின் முற்பகுதியில், போர்த்துக்கீசர் இலங்கையின் கரையோரப் பகுதிகளைக் கைப்பற்றினர். கைப்பற்றியவுடன் தமது கத்தோலிக்க மதத்தைப்புகுத்துவதற்கு முதற்படியாக சைவாலயங்களை இடித்து அந்தக் கற்களைக் கொண்டு தமது ஆலயங்களை நிறுவினர். அதனால் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலும் இடிக்கப்பட்டதுமல்லாமல் அது இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் ஒல்லாந்தர் (டச்சு) ஆட்சியின் இறுதிக் கட்டத்தில் யாழ்ப்பாணக் கச்சேரியில் (கலெக்டர் ஆபீஸ்) பணிபுரிந்து வந்த சைவவேளாண் குலத்தவராகிய திரு மாப்பாணமுதலியார் அவர்கள் அரசின் அனுமதி பெற்று இவ்வாலயத்தை மீண்டும் கட்டியெழுப்பினார். முந்திய ஆலயம் இருந்த இடத்தில் இருந்து ஒரு கி.மீ. தூரத்திலேயே இப்புது ஆலயம் உள்ளது. திரு மாப்பாண முதலியாரின் பரம்பரையில் வந்தவரே இப்போதுள்ள காவலர் திரு. குமாரதாச மாப்பாணமுதலியார் ஆவார். சிறந்த தெய்வ பக்தராய் ஆலய நிர்வாகத்தில் கண்ணும் கருத்து மாக இருந்து கடமைபுரிகின்றார். இவர் அடியார்களுடன், ஒரு அடியாராய் நின்று நித்திய பூசனைகளில் கலந்துகொண்டு வழிபடுவது வழக்கம். காலம் தவறாமல் ஆலய அலுவல்களைக்கவனித்து வருவதால் ஆலயப் பூசாரிகளும் ஊழியரும் வழிபாடு செய்யும் இடத்தை தூய்மையாக வைத்திருக்கின்றனர். ஆகவே, இவ்வாலயம் மற்றைய ஆலயங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகவிளங்குவதில் வியப்பில்லை.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களும் நல்லூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். அவரின் புகழ் இந்தியாவிலும் அக்காலத்தில் பரவியிருந்தது. திருசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களும் வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமி அவர்களும் சமகாலத்தவர். திருவாவடுதுறை ஆதினத்தால் ''நாவலர்'' என்னும் கௌரவப்பட்டம் அளிக்கப்பட்டார். அன்னார், ஏட்டுசுவடிகளிலிருந்த தமிழ்ப்புராணங்களையும் இலக்கண இலக்கியங்களையும் பதிப்பித்த பேராசிரியர். மேலும், அவரின் பரந்தநோக்கிற்கும் விரிந்த மனப்பான்மைக்கும் எடுத்துக் காட்டாக அவர் தமிழில் மொழி பெயர்த்த விவிலியநூல் (பைபிள்) விளங்குகிறது. நல்லூர்க்கந்தசுவாமி கோயிலில் பல சீர்திருத்தங்களை அவர்செய்தார். உதாரணமாக, மிருகபலியிடுதலையும் சதுர்க்கச்சேரியையும் ஒழித்தார். இன்றும் இத்தகைய பழக்கங்கள் இவ்வாலயத்தில் கிடையா. ஆண்கள் சட்டை போன்ற மேலாடைகள் அணிந்து ஆலயத்துள் செல்லமுடியாது. அளவிடமுடியாத சைவப்பணிகளைச் செய்த நாவலரின் உருவச் சிலை கோயிலுக்கு மிக அண்மையில் 1979ஆம் ஆண்டு நிறுவப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

புகழ்பெற்ற யோக சுவாமிகளின் தெய்வீக வாழ்க்கைக்கு வித்திட்ட இடமும் நல்லூர்க்கந்த சுவாமி கோயிலே ஆகும். அவர், சித்தராகிய செல்லப்பா சுவாமிகளின் மாணவரானதும் இக்கோயிலிலேயே ஆகும். சில ஆண்டு இக்கோயிலின் தேர்மண்டபத்தில் தங்கியிருந்து அருள் பெற்ற பின்பே கொழும்புத்துறை என்னும் இடத்துக்குச் சென்று ஆச்சிரமம் ஒன்று அமைத்தார். ஆகவே, சித்தர்கள் யோகியர்களின் இருப்பிடமாக நல்லூர் விளங்கியது கண்கூடு. மேலும், ஒரு இஸ்லாமிய குருவின் சமாதியும் ஆலயத்துக்குச் சமீபத்தில் இருந்ததாக ஒரு வரலாறும் உண்டு.

இத்தகைய சிறப்புகளுக்குக் காரணமாகிய நல்லூர் ஆலயம் புதுப்பொலிவுடன் எப்போதும் காணப்படுகிறது. கலியுகவரதனான முருகனின் அருள் நிரம்பப் பெற்றது இவ்வாலயம். தமிழ் நாட்டில் பழநி ஆண்டவர் கோயில், உண்டியல் வருமானத்திலும் பக்தர்களின் எண்ணிக்கையிலும் எப்படி முதலிடம் வகிக்கிறதோ, அதே போல இலங்கையில் நல்லூரில் இக்கோயில் விளங்குகின்றது.

இவ்வாலயத்தின் கிழக்கு வாசலில் அழகான இசை கோபுரமும் தெற்கில் ஆறுமுக சுவாமிகளின் வாசலில் ஒரு கோபுரமுமாக இரு கோபுரங்களுண்டு. ''கோபுர தரிசனம் கோடி புண்ணியம்'' என்று பெரியோர் சொல்வார்கள். ஆகவே, இராசகோபுரத்தின் உச்சியில் ஒரு வேலும் ''ஓம் முருகா'' என்ற எழுத்துக்களும் ஒளிமயமாகக் காட்சியளிக்கின்றன. காலந்தவறாமல் அடியார்

## ஆண்டவன் கணக்கெடுக்கின்றான்

மக்களில் யார் யார் தம்மை மலர்தூவி ஆராதிக்கிறார்கள் என்பதையும், யார் யார் பயனற்ற காரியங்களில் பொழுது போக்கி வீணாகிறார்கள் என்பதையும் ஈசன் கணக்கெழுதிக் கொள்கிறான் என்பதைத் திருநாவுக்கரசர்பெருமான் கீழ்க்கண்ட பாடலால் அறுவுறுத்தியிருக்கின்றார்.

''தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே''

(பதிகம்135-8)

முறை சூழ்ச்சிகளைச் செய்து தோற்றுப்போனான். இறுதியாக ஓராண்டுக்காலக் கரந்துரை வாழ்வின் போதும் பாண்டவர்களை எப்படியேனும் கண்டு பிடித்து அவர்களை மீண்டும் கானகத்திற்கே அனுப்பிவிட வேண்டும் என்ற வஞ்சகஎண்ணத்தால் அவன் செய்த முயற்சிகள் பலவும் கூட தோற்றே போயின.

இப்படிப் பாண்டவர்கள் வாழ்வதே கூடாது என்ற பகையெண்ணம் கொண்டவனாகிய துரியோதனன் எப்படிச் சத்தியத்திற்குக்கட்டுப்பட்டுத் தன்னுடைய உறுதிமொழிக் கிணங்க, பாண்டவர்களுக்கு உரிமை உடைய அரசாட்சியை வழங்குவான்? தருமர் பொறுமையின் சின்னமாய் உலூக முனிவனைத் துரியோதனனிடம் தூதனுப்பிப்பார்த்தார். போர் என்ற ஒன்று நடக்குமானால், அதனால் விளையக் கூடிய பாதகங்கள் கொடியனவாக இருக்குமே என்று எண்ணியும், தமக்கு இன்னல்கள் பல செய்த போதும் துரியோதனாதியரை தம்பியராக மதித்துமே போர் வேண்டாம் என்று தருமர் விரும்பினார். ''ஐந்து ஊர் கொடுத்தால் போதும், ஐந்து தெரு கொடுத்தால் போதும், அதுவும் கொடுக்க மனம் இல்லாவிட்டால் ஐந்து வீடுகள் கொடுத்தாலும் போதும்'' என்று கண்ணபெருமானையே தூதனுப்பிக் கேட்டுப் பார்த்த தருமருக்கு கிடைத்த பதில் ''ஊசிமுனை இடம் எனினும் ஈயமாட்டேன்'' என்பதுதான்.

இப்படி இருசாராரில் ஒரு சாரார் எவ்வளவு தான் விட்டுக் கொடுத்துப் போனாலும் மறுசாரார் கொஞ்சமும் இணங்கி வரவில்லையானால், ஈசனே விரும்பினாலும் எப்படி போரைத் தடுத்து நிறுத்தி விட முடியும்? பாஞ்சாலி அவிழ்ந்த கூந்தலுடன் பதின்மூன்றாண்டுக் காலமாக அல்லல்பட்டுக்கொண்டிருந்தாள். வீமனும் கைகளால் நீர் பருகிக் காலம் பதின்மூன்றாண்டுகள் ஓடிப் போய்விட்டன. ''மூளை, வாயின் வழி வெளியே வருமாறு பாடம் புகட்டா விட்டால், துரியோதனன் திருந்தமாட்டான்'' என்பது அனைவருக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்து விட்டது. ஆதலால்தான் துரியோதனின் கொடிய பாவங்கள் அனைத்திற்கும் முடிவு கட்ட போர் நடந்தே தீரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது.

குருசேத்திரத்தை நோக்கி இரு தரப்புப்படைகளும் வந்து குவிந்தன. பாஞ்சாலியின் தந்தையாகிய துருபதராசன் தன்னுடைய மருகர்களாகிய பாண்டவர்களுக்குத் துணையாக ரஜ, கஜ, துரக, பதாதிகளுடன் வந்து சேர்ந்தார். துரோணரைக் கொல்வதற்காகவே அவர் சிவபெருமானை நோக்கித் தவம் செய்து பெற்றெடுத்த மைந்தன் திட்டதுய்மனும், வீடுமரைக் கொல்வதற்காகவே பிறந்தவனாகிய மற்றொரு மகன் சிகண்டியும் துருபதராசனுடன் வந்து சேர்ந்தான். துருபதராசனுடன் அவனுடைய உறவினர்களான மன்னர்கள், உத்தமோசா, யுதாமந்யு ஆகியோரும் வந்தனர். பாண்டவர்கள் தங்கள் ஓராண்டுக் காலக் கரந்துரை வாழ்வின்போது தங்கியிருந்த விராட தேசத்து மன்னன் தம் மக்களாகிய சுவேதன் மற்றும் உத்தர குமாரனுடனும் வந்து சேர்ந்தனர். இன்னும் பாண்டவர்களுக்கு உதவியாக நம்முடைய தமிழகத்தை ஆண்டிருந்த சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களும்கூடப் போய்ப் போரில் கலந்து கொண்டிருக்கின்றனர்.

இவர்களே அல்லாமல் அரக்கித் தந்தருள் கடோத்கஜக் காளையும் தன்னுடைய வீரத்தைக் காட்ட வந்து சேருகின்றான். அர்ச்சுனனின் மைந்தன் ''வீர அபிமன்யு'' என்று பாரோர் புகழும் பராக்கிரமனும் வந்து சேருகிறான். இவர்களுடன் அர்ச்சுனன் தன்னுடைய தீர்த்தயாத்திரையின் போது நாகக் கன்னியை மணந்து பெற்றெடுத்த இரவான் என்ற பலவானும் வந்து சேருகின்றான். பாஞ்சாலி ஈன்றெடுத்த உபபாண்டவர்கள் விந்தன், சோமன், வீர கீர்த்தி, புண்டலன், செயசேனன் ஆகிய ஐவரும் அன்னையின் கூந்தல்முடிக்க அடல் போராற்ற வந்து சேருகின்றார்கள்.

இவ்வாறு பாண்டவர்களின் பக்கமாகத் தருமத்தைக் காக்கத் திரண்ட சேனையின் அளவு மொத்தம் ஏழு அக்குரோணிகள் ஆகும். ஒரு அக்குரோணி என்பது யானைகள் 21,870, தேர்கள் 21870, குதிரைகள் 65610 மற்றும்காலாள்வீரர்கள் 100930 அடங்கியதாகும். பாண்டவர் பக்கம் இவ்வாறு திரண்ட மொத்த சேனையின் அளவு ஏழு அக்குரோணிகள். ஆனால் இவர்களை விட நான்கு அக்குரோணிகள் அதிகமாகவே மொத்தம் பதினோரு அக்குரோணி சேனைகள் துரியோதனின் பக்கம் திரண்டிருந்தன. கொடியவனாகிய துரியோதனன், சேனை திரட்டுவதிலும் கூட அநியாயமாகவே நடந்து கொண்டான். ''தனக்கு ஆதரவாகப் படைகளுடன் வராத மன்னர்களுக்கு வாழ்வு கிடையாது' என்பதாக மிரட்டி ஓலையனுப்பியே படையைத் திரட்டி விட்டான். பாண்டவர்களின் இளைய தாயும் நகுல, சகாதேவர்களை ஈன்றவளுமாகிய மாத்ரிதேவியுடன் பிறந்தவனாகிய மத்திர நாட்டு மன்னன் சல்லியன் தன் மருகர்களுக்குப் போரில் சகாயம் செய்ய, படைகளுடன் புறப்பட்டு உப்பிலாவியம் நோக்கிப் புறப்பட்டு வந்து கொண்டிருந்தான். சல்லியன் மாபெரும் வீரன். கண்ணபெருமானுக்கு நிகராகத் தேரும் செலுத்த வல்லவன். அவனைத் தன் பக்கமாகப் போரில் சேர்த்துக் கொள்ள வஞ்சகன் துரியோதனன், அவன் வரும் வழியில், தருமர் அமைத்தாற்போல சத்திரங்களை அமைத்து அதில் சல்லியனும் அவன் படைவீரர்களும் தங்கி உண்டு இளைப்பாறிய வேளையில், ''நானே உணவளித்தவன், எனக்கே உதவியாக வேண்டும்'' என்று கேட்டு வஞ்சகமாகச் சல்லியனின் செஞ்சோற்று நன்றிக் கடனைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு விடுகிறான். காலமறிந்து கொடுக்கப்பட்ட ஒரு வேளைச் சோற்றுக்காகவும், செஞ்சோற்றுக் கடன் ஆற்றும் நன்றியுணர்வு மிகுந்திருந்தது, அக்காலத்து மன்னர்களுக்கு. இவ்வாறு பாண்டவர்களின் தாய் மாமனாகிய சல்லியனையும் தன் பக்கமாக்கிக் கொண்டான் வஞ்சகத் துரியோதனன். அது மட்டுமல்ல, கண்ணபெருமான் பாண்டவர் சகாயன்

## புலால் மறுத்தல் யாருக்கு?

வள்ளுவர் பெருமான், வற்புறுத்திய புலால் மறுத்தல் கொள்கை இல்லறத்தார்க்கு உரியது அன்று, துறவறத்தார்க்கே என்பது தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் கருத்தாகும். இது பற்றி அவர் தந்துள்ள விளக்கத்தைக் காண்போமா?

''திருவள்ளுவர் புலால் மறுத்தல் அதிகாரத்தைத் துறவற இயலில் வைத்துள்ளார். ஆதலால் புலால் உண்ணாமை எல்லோரும் மேற்கொள்ளக் கூடிய ஒழுக்கமன்று என்று திருவள்ளுவர் கருதினார் போலும் எனக் கருதவும் இடமுண்டு. திருவள்ளுவர் இல்லற இயலிலும், குடியியலிலும் புலால் உண்ணாமையைக் கூறவில்லை. துறவிகள் அல்லாதார் புலால் உண்ணுதலுக்கு உடன்படுகிறார் என்பது நமது கருத்து. தற்போது உலகத்தை நெருக்கடியில் ஆழ்த்தியுள்ள உணவுச் சிக்கலுக்குச் சரியான தீர்வு புலால் உண்ணுதலைப் பெருக்குதல் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். இன்றைய அறிஞர்களின் கருத்து, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்தோன்றிய திருவள்ளுவரின் சிந்தனை! ஆனாலும் துறவிகள் புலால் உண்ணக்கூடாது என்பது திருவள்ளுவரின் திட்டவட்டமான கருத்து''

ஆதாரம்: தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் ''குறட்செல்வம்'' என்ற நூலில் பக்கம் 124—125

நூல் கிடைக்குமிடம்: கலைவாணி புத்தகாலயம், 158, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17.

---

என்பது பாருக்கே நன்றாகத் தெரிந்திருந்த போதும் அவரையுமே தன் பக்கமாக வளைத்துப் போடத் துரியோதனன் சூழ்ச்சி செய்தான். அவனுடைய சூழ்ச்சியைக் கண்ணபெருமான் தம்முடைய சூழ்ச்சியால் முறியடித்து விட்டதையும் நாம் பாரதத்தில் பார்க்கிறோம். கண்ணபெருமானின் துவாரகாபுரிக்குச் சென்று தனக்கு அவர்ப் படைத்துணையாக வேண்டும் என்று முதலில் கேட்டு விட்டால், முதலில் உதவி கேட்டவர்க்கே உதவுதல் வேண்டும் என்ற தரும நியாயத்தின்படி கண்ணன் தனக்கே உதவ வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாவான் எனக் கருதிய துரியோதனன் துவாரகாபுரிக்குச் சென்றான்.

''துரியோதனன் வந்துவிட்டான், அவன் போரில் என்னுடைய சகாயம் கோரவே வந்திருக்கிறான். 'முதலில் நான்தானே வந்து உதவி கேட்கிறேன். அதை மறுக்காமல் தரவேண்டும்' என்று துரியோதனன் வற்புறுத்தவும் கூடும். அதற்கு வழியில்லாமல் அர்ச்சுனனையும் வரவழைத்துவிட வேண்டும்'' என்பதாகக் கண்ணபெருமான் திருவருள் புரிந்து உலூக முனிவரிடம் அர்ச்சுனனுக்குத் தகவலும் கூறி அனுப்புகிறார். ஆனால் அர்ச்சுனன் அத்தகவலை அறிந்து துவாரகாவுக்கு வருவதற்கு முன்பே துரியோதனன் துவாரகாபுரிக்கு கண்ணபெருமானைக்காண வந்துவிட்டான். அர்ச்சுனன் வந்து சேருவதற்கு முன் துரியோதனனை வரவேற்றுப் பேச கண்ணபெருமானுக்கு விருப்பமில்லை. ஆதலால் அவரே வாயிற் காவலனை அழைத்து ''என்னைக் காணத் துரியோதனன், அர்ச்சுனன் இருவருமே வருவார்கள். அவர்களின் வருகையை எனக்குத் தெரிவிக்காமலே என்னுடைய பள்ளியறைக்குள் அனுப்பிவை'' என்பதாக ஆணையிட்டுப் பள்ளியறைக்குச் சென்று அறிதுயில் கொள்ளலானார்.

துவாரகாபுரியின் அரண்மனை மாடங்களில் பறந்துகொண்டிருந்த கொடிகள் ''துரியோதனா, நீ வந்து முதலில் எங்கள் கண்ணபெருமானின் துணையை வேண்டினாலும், எங்கள் பரந்தாமன் பாண்டவர் தங்கட்கல்லால் படைத்துணையாக மாட்டான்'' என்று கூறுவதைப்போல காற்றில் அசைந்து கொண்டிருந்தன. அவற்றின் கருத்தை அறிந்து கொள்ள மாட்டாதவனாகிய துரியோதனன் நேராகத் துவாரகாபுரிக்குள் நுழைந்து, காவலர் எவரின் தடையும் இல்லாமலே கண்ணபெருமானின் பள்ளியறை வரையிலும் சென்று, அங்கே துயின்றுகொண்டிருந்த கண்ணனைப் பார்த்தான். கண்ணன் பள்ளிக்கொண்டிருந்த மஞ்சத்தின் தலைமாட்டில், அழகிய வேலைப்பாடமைந்த ஆசனம் ஒன்று போடப்பட்டிருந்தது. மாமன்னன் என்ற மமதைகொண்டு விளங்கியவனாகிய துரியோதனன், கண்ணபெருமானின் தலைமாட்டிருந்த ஆசனத்தில் நேராகப்போய் அமர்ந்து கொண்டுவிட்டான். இதனை அறிதுயிலிலிருந்தபடியே அறிந்து கொண்டவராகிய கண்ணபெருமானும் ''அர்ச்சுனன் இன்னும் வரவில்லையே'' என்பதாகச் சிந்தித்துக் கொண்டிருந்த அளவில், அர்ச்சுனனும், கண்ணன் ஏவலின்படியே விரைந்து வந்து, தானும் எந்த ஒரு தடையுமின்றிக் கண்ணபெருமானின் கால்மாட்டில் வந்து நின்றான். அர்ச்சுனன் வந்து விட்டதைத் தெரிந்துகொண்டு விட்ட கண்ணபெருமான் அதன் பிறகே கண்மலர்ந்தார். அவருடைய கண்களுக்குக் கால்மாட்டில் வந்து நின்ற அர்ச்சுனனே முதலில் தென்பட்டான். ''வா, வா, அர்ச்சுனா, எப்பொழுது வந்தாய், ஏன் என்னை எழுப்பவில்லை'' என்பதாக அன்பு மொழிகள் கூறி அர்ச்சுனனை அணைத்துத் தன் கட்டிலின்மேலேயே அமர வைத்துக் கொண்டார் கண்ணபெருமான். அர்ச்சுனனே கண்ணபெருமானுக்குத் தலைமாட்டமர்ந்திருந்த துரியோதனனைக் காட்டுகின்றான். துரியோதனன் வந்தமர்ந்திருப்பதை அப்பொழுதே தாம் பார்த்ததைப் போல் நடித்தார் கண்ணபெருமான். ''அடடா, இருவரும் வந்திருக்கிறீர்களே, என்ன காரணமாக வருகை புரிந்துள்ளீர்களோ!' என்று பொதுவாகக் கண்ணபெருமான் வினவ' ''செருவில் நீ எமக்கு வெம்போர்செய் துணையாக வேண்டும்'' என்று இருவருமே கண்ணபெருமானை ஒரு சேரக் கேட்டுக் கொள்கிறார்கள்.

முன்னதாக வந்து கண்ணனின் துணையை வேண்டிப் பாண்டவர்களை ஏய்க்க வேண்டும் என்று வஞ்சம் செய்தான் துரியோதனன். தூங்குவதைப் போல் நன்றாகவே நடித்த கண்ணபெருமானும், அர்ச்சுனனையே தான் முதலில் பார்த்ததாகக்கூறி முதலில் தன் விழிக்கு இலக்கான அர்ச்சுனனுக்கே தாம் துணையாகப் போவதாகவும் கூறியருளினார்.

''உற்றமர் உதவி செய்வான் உதிட்டிரன் தனக்கு முன்னே
சொற்றனன் ஆங்கண், ஈங்குந்துயிலுன் பொழுதுமின்று
விற்றிறல் விசயன் முந்த விழிக்கிலக்கானான் என்று
பற்றறத் துணிந்து சொன்னான் பாண்டவர் சகாயனான்''

(வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம் 15)

முன்னமே போரில் தாம் உதவிசெய்வதாகத் தருமருக்கு வாக்களித்து விட்டபடியாலும், அர்ச்சுனனே தன் கண் காண, முதலில் தனக்குத் தென்பட்டபடியாலும், பாண்டவர்க்கே தாம் துணை செய்யப் போவதாக கண்ணபெருமான் தெரிவித்து துரியோதனின் சூழ்ச்சியைத் தம் சூழ்ச்சியால் வென்ற வரலாற்றையும் இவ்வாறு மகாபாரதத்தில் காண முடிகிறது.

ஆனால், வஞ்சகன் துரியோதனன் தன் எண்ணம் இவ்வாறு முடியாமல் போய்விட்டவேளையில் அதைத்தாங்கி ஏற்றுக்கொண்டானா என்றால் இல்லை. ''பாண்டவர்க்குத் துணையாகிவிட இசைந்தால்தான் என்ன? எனக்கு வேறொரு வாக்கு கொடு. போர்க்களத்தில் ஆயுதங்கள் எதையும் தாங்கமாட்டேன் என்ற வாக்கினை மட்டும்எனக்கு கொடு' என்று கேட்கலுற்றான் துரியோதனன். அதற்கும் கண்ணபெருமான் இசைந்து ''சரி, நீ வேண்டியபடியே எந்த ஒரு ஆயுதத்தையும் ஏந்த மாட்டேன்'' என்பதாகத் துரியோதனனுக்கு வாக்கும் தந்துவிடுகிறார். ''ஆயுதம் ஏற்காத என்னால் என்ன பயன் இருக்க முடியும் அர்ச்சுனா'' என்று அர்ச்சுனனை நோக்கிக் கண்ணபெருமான் வினவ, அர்ச்சுனனும் கண்ணபெருமானைப் பணிந்து

''செருமலி யாழியங்கைச் செழுஞ்சுடர் நின்றென் தேரிற்
பொருபரி தூண்டின் இந்தப் பூதலத் தரசர் ஒன்றோ
வெருவருமியக்கர் விண்ணோர் விஞ்சையர் எனினும் என்கை
வரிசிலை குழைய வாங்கி மணித் தலைதுமிப்பன்''.

(வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கம் 55)

என்று கூறக் காண்கிறோம். ''ஆயுதங்கள் ஏந்திப் போர் செய்ய வேண்டாம், ஆபத்பாந்தவா! அடியேன் தேரில் அமர்ந்து தேரைச் செலுத்தினாலே போதும், நீ பக்கம் இருந்தால், பரிகளைச்செலுத்தினால் பூதலத்தரசர்களை மட்டுமல்ல; விண்ணவர் விஞ்சையர், இயக்கர், யாவரே வந்தாலும் நின் திருவருளால் வெல்வேன்'' என்று பார்த்தன் கூற, பார்த்தனுக்குப் பாரதப் போரில் சாரதியாக இசைகிறார் கண்ணபெருமான்.

பாரதப்போரில் ஆயுதம் தாங்காமல் பார்த்தனுக்குச் சாரதியாக இசைந்த கண்ணபெருமான், துரியோதனனுக்குத் தன்னுடைய யாதவப்படை முழுவதையும், தம் சகோதரன் ஆன பலராமனையும் கூட இசைந்துப் படைத்துணையாகத் தர ஒப்புக் கொண்டுவிடுகிறார். பாண்டவர்களுக்குக் கண்ணன் ஒருவர் மட்டுமே போரில் துணை; பலராமன் உள்ளிட்ட யாதவப் படை முழுவதும் துரியோதனனுக்குத் துணை. அப்படியானால் அவன் பக்கம் பதினொரு அக்குரோணி சேனைகள் திரளுவதில் விந்தை என்ன இருக்க முடியும்? பதினொரு அக்குரோணி சேனைகள் என்ன, பல நூறு கோடி அக்குரோணி சேனைகள் தான் துரியோதனன் பக்கம் திரளட்டுமே! கண்ணபெருமான் ஒருவர் துணை நிற்க பாண்டவர் ஐவரும் சேர்ந்து தனியாகவே பொருதாலும், சத்தியத்தைக் காக்க அவர்களால் இயலும். காரணம், ஆக்கவும், அழிக்கவும் வல்ல இறைவனான கண்ணபெருமான் ஒருவரின் துணைதான் முக்கியமே தவிர, அக்குரோணி சேனைகள் முக்கியம் அல்ல. கருவிகள் ஏதுமின்றியே காரியத்தை நடத்தவல்லவர் இறைவனாகிய கண்ணபெருமான். அவர் போரில் எந்தப் படைக்கலத்தையும் ஏந்தமாட்டேன் என்று துரியோதனனுக்கு வாக்கு கொடுத்தமைக்கும், இறைவனின்

## கண்டுபிடிக்க முடிகிறதா?

நமக்கு நன்றாகத் தெரிந்த சமயச் சான்றோர்கள் சிலருக்குப் பெற்றோர்கள் இட்ட பெயர்கள் கீழே தரப்பட்டிருக்கின்றன. இப்பெயர்களைக் கொண்டு, அச்சான்றோர்கள் யாரென்று உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா என்று பாருங்கள்.

1. கதாதரர்
2. நரேந்திரர்
3. மருள்நீக்கியார்
4. வெண்காடர்
5. புனிதவதி
6. திண்ணன்

கண்டுபிடிக்க முடியவில்லையானல் அடுத்த பக்கத்தைப் பாருங்கள்.

ஆற்றலை விளக்கும் இந்த அற்புதத் தத்துவத்தைக் காட்டுவதற்கே ஆகும். மேலும் பெருகிக் கிடக்கும் அதர்ம உயிர்களின் பாரம் தாங்காத பூமியின் பாரத்தை இப்போரின் மூலமாகக் குறைப்பதே கண்ணபெருமாளின் நோக்கமும் ஆவதை முன்னமே சகாதேவன்

''நீ பா ரதஅமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா''

என்று கூறியிருப்பதையும் நாம் அறிவோம். ஆகவே தான் தன்னுடைய சேனைகளையும் கூட, துரியோதனன் வேண்டாமலே கண்ணபெருமான் அவனுக்குத் துணையாக்குவதைக் காணுகின்றோம்.

இவ்வாறு குருசேத்திரப் போர்க்களத்தில் பாண்டவர்களின் ஏழு அக்குரோணி சேனைகள் ஒருபுறமும், துரியோதனனின் பதினோரு அக்குரோணி சேனைகள் மறுபுறமாகத் திரண்டுவிட்டன, போரில் வெற்றிபெற வேண்டுமானால், போர்த் தெய்வமாகிய காளிக்கு உத்தம குணங்கள் நிறைந்த ஓர் ஆடவனை நல்ல நேரம் பார்த்துப் பலிகொடுத்தாக வேண்டும். 'களப்பலி கொடுத்ததற்குத் தகுதி வாய்ந்த ஆடவன் யார்? களப்பலி கொடுப்பதற்குப் பொருத்தமான நேரம் எது?'' என வீடுமரை வினவுகின்றான் துரியோதனன். 'களப்பலிக்குப் பொருத்தமான உத்தம குணம் நிறைந்த ஆடவன், அர்ச்சுனன் மகனாகிய இரவானே. அவனை அடைந்து எங்களுக்குக் களப்பலியாக இசையவேண்டும் என்று கேட்டுக் கொண்டால், பகைவன் எனப்பாராது அவனும் பலியாக இசைவான். களப்பலிக்கு உரிய நேரத்தைக் கணித்துத் தர வல்லவன் தருமனின் தம்பியாகிய சகாதேவன் ஒருவனே, அவனைப் போய் நேரம் கணித்துத்தரச் சொன்னால், அவனும் பகைவன் எனப் பாராது கணித்துத் தருவான்.'' என்று வீடுமர் துரியோதனனுக்கு அறிவுறுத்த, துரியோதனனும் இயந்திர விமானத்தில் ஏறிப் பாண்டவர்கள் தங்கியிருந்த உபப்பிலாவியம் உடனே போய்ச் சேருகின்றான். துரியோதனனின் விருப்பப்படி களப்பலிக்குச் சகாதேவன் முகூர்த்தம் நிச்சயித்துக் கொடுத்தானா? அர்ச்சுனனின் மகனாகிய வீர இரவான் துரியோதனனுக்குக் களப்பலியாக உடன்பட்டானா? முள்ளை முள்ளால் களைய வல்ல ஆதிமூலமான கண்ணபெருமான் துரியோதனின் இந்த சூழ்ச்சிகளையும் வெல்ல மாற்று சூழ்ச்சிகள் ஏதேனும் புரிந்தாரா? என்பனவற்றையெல்லாம் இனி அடுத்த இதழில் விரிவாகக் காண்போம்.

(தொடரும்.)



மருள்நீக்கியார்—அப்பர்



திண்ணன் — கண்ணப்பர்

வெண்காடர்—பட்டினத்தார் ▷

# இவர்கள் தான் அவர்கள்



பட்டணத்து சுவாமிகள்.



புனிதவதி—காரைக்கால் அம்மையார்



◁ கதாதரர்—
இராமகிருஷ்ண பரமஹம்சர்



நரேந்திரர்—
விவேகானந்தர் ▷



# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், திருச்செந்தூர்

## செந்திலாண்டவர் கோடி அர்ச்சனை

அறுபடை வீடுகளுள் தனிச்சிறப்புற்று விளங்கும் இரண்டாம் படைவீடான திருச்செந்தூரில் அமர்ந்து அருள்புரியும் செந்திலாண்டவனுக்கு கோடி அர்ச்சனை 12-2-86 முதல் துவங்கி, அது முதல் அனுதினமும் தொடர்ந்து நடத்தி முடிக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது. 12-2-86 காலை 5.00 மணிக்கு மேல் 6 மணிக்குள்ளாக கணபதி ஹோமம் நடத்தி, அதைத் தொடர்ந்து 6.45 மணிக்கு மேல் 7.45 மணிக்குள்ளாக கோடி அர்ச்சனை துவக்கப்பட்டது. கோடி அர்ச்சனை முடிவுற ஏறத்தாழ 4 முதல் 5 மாதங்கள் ஆகும் என எதிர்பார்க்கப்படுகிறது.

கோடி அர்ச்சனையில் பங்கு கொள்ள விரும்புகிறவர்கள், சகஸ்ரநாம அர்ச்சனை ஒன்றுக்கு கட்டணமாக ரூ. 25 தொகையை நேரிலோ, மணியார்டர் மூலமாகவோ அல்லது திருச்செந்தூரில் உள்ள பாரதவங்கி, கனரா வங்கி, பேங்க் ஆப் தமிழ்நாடு, திருநெல்வேலி கூட்டுறவு மத்திய வங்கி ஆகிய வங்கிகளின் டிராப்ட் மூலமாகவோ ''நிர்வாக அதிகாரி, அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், திருச்செந்தூர் 628 215'' என்ற முகவரிக்கு அனுப்பினால் அதற்குரிய அச்சடித்த சீட்டும், அர்ச்சனை செய்து விபூதி குங்குமப் பிரசாதமும் அனுப்பி வைக்கப்படும். தொகையை அனுப்பும்போது அர்ச்சனை செய்பவரின் பெயர், முகவரி, நட்சத்திரம் முதலான விவரங்களையும் அனுப்ப வேண்டும்.

நாட்டு நலனுக்காகவும், உலக அமைதிக்காகவும், சுமார் பதினைந்து ஆண்டுகட்குப் பின்னர் மூலவருக்குச் செய்யப்படும் இந்த கோடி அர்ச்சனை வாய்ப்பினை பக்தப் பெருமக்கள் பயன்படுத்திக் கொண்டு செந்திலாண்டவர் அருள்பெற்று உய்யுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

குறிப்பு:

மேற்படி கோடி அர்ச்சனைக்குத் தினமும் அதிக அளவு வில்வம், துளசி, மற்றும் விடுபுஷ்பங்கள் தேவைப்படுவதால், பக்தப்பெருமக்கள், தங்களால் இயன்ற அளவு இத்திருக்கோயிலுக்கு அனுதினமும் கிடைக்கும் வண்ணம் வில்வம், விடுபுஷ்பம் ஆகியவைகளை காணிக்கையாக அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

கோடி அர்ச்சனை நடைபெறும் காலங்கள் :

| | |
|---|---|
| தினந்தோறும் | காலை 6.45 முதல் 7.45 மணி வரை |
| | 8-30 முதல் 10.00 மணி வரை |
| | 11.30 முதல் 12.30 மணி வரை |
| | மாலை 5.30 முதல் 8.00 மணி வரை. |

கே. நந்தகோபால்
துணை ஆணையர்/நிருவாக அதிகாரி

எஸ். ஆர். சுப்பிரமணிய ஆதித்தன்,
எம்.எல்.ஏ.,
தக்கார்

